29-11-68 முதல் - சென்னை : வெலிங்டன், பிரபாத், ராக்ஸி, ராம்

மற்றும் தென்னுடெங்கும்



# கல்கி பொருளடக்கம்

கீலக, கார்த்திகை 16 :: :: டிசம்பர் 1



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



காந்தி நூற்றாண்டு விழா!
சர்க்கார் பந்தயம், லட்சக் கணக்கில் வாருங்கள்
கள்ளு சாராயக் கடை ஏலம்
கொடுத்த வாக்கை மறுப்போம்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 ★ இதழ் 18

# தீமைக்கு நிரந்தர வாழ்வா?

**லா**ட்டரி சீட்டில் லட்சாதிபதிகளானவர்களைப் பற்றிச் செய்திகள் வருகின்றன. அதே சமயம் தங்கள் சக்திக்கு மீறி இச் சீட்டுக்களை வாங்கிவிட்டு, பரிசு ஏதும் பெருமல் மனமுடைந்து போனவர்களைப் பற்றியும் செய்திகள் கூறுகின்றன. லட்சாதிபதியாகிறவர்கள் அபூர்வத்திலும் அபூர்வமானவர்களே. மனமுடைந்தவர்களோ ஏராளம். ஒரு முறை பரிசு பெருததால் இவர்கள் லாட்டரியில் பணம் போடுவதை நிறுத்த மாட்டார்கள். 'இந்த நஷ்டத்தையும் அடுத்த முறை ஈடு கட்டலாம்; அடுத்த முறை நஷ்டம் ஏற்பட்டால் அதையும் ஈடு கட்ட இன்னொரு முறை லாட்டரியில் பணம் போடலாம்' என்கிற ரீதியிலேயே மனித இயல்பு செயல்படும். ஏழை எளியவர்கள் உள்பட லாட்டரியில் நமது மக்கள் எப்படிச் சிக்கிவிட்டார்கள் என்பது இத்திட்டத்தில் மொத்தம் சேர்ந்துள்ள தொகையிலிருந்து தெரிகிறது. அரசாங்கம் இத்திட்டத்தினுல் முழு ஆண்டுக்குமாக ஒரு கோடி ரூபாய் கிடைக்குமென எதிர்பார்த்தது. ஆனல் இதற்குள்ளேயே ஒன்றே கால் கோடி ரூபாய் சேர்ந்திருப்பதாகத் தெரிகிறது.

இந்த ஒன்றே கால் கோடி ரூபாய் மக்கள் சேமிப்பையோ அல்லது இதர அவசியச் செலவுகளைக் குறைத்ததாலோ கிடைத்திருக்கிறது.

சர்க்காரின் லாட்டரிச் சீட்டுக்களை வாங்குவதில் மக்கள் பணம் செலவு செய்வதால், அவர்கள் சினிமாவுக்குச் செலவழிப்பது கணிசமாகக் குறைந்திருப்பதாகச் செய்தி வந்திருக்கிறது. அதாவது லாட்டரியில் தங்கள் அதிருஷ்டத்தைச் சோதிப்பதற்கு முதற் படியாக மக்கள் தங்கள் பொழுது போக்குக்கான நிகழ்ச்சிகளை விட்டுக் கொடுக்க முன்வந்திருக்கிருர்கள். இப்போக்கு இதோடு நிற்காது. சூதாட்டச் சபலம் காட்டுகிற அதிருஷ்ட வாய்ப்புக்கு இது முதல் பலிதான். இதன் பின் குடும்ப வாழ்க்கையைக் காப்பதற்கு எவையெல்லாம் அத்தியாவசியமோ அவையும் ஒன்றன் பின் ஒன்ருகப் பலியிடப்படும். அவற்றுக்காகச் செலவு செய்ய வேண்டிய தொகை லாட்டரியில் ஈடுபடுத்தப்படும்.

மதுபானம் மட்டுமே விவேகமாகச் சிந்திக்கும் ஆற்றலை இழக்கச் செய்யும் என்பதல்ல. சூதாட்ட உணர்வும் மதிமயக்கத்தை உண்டாக்கவே செய்யும். இதனுல்தான் சூதாட்டம் நடத்துபவர்களை எல்லா நாகரிக நாடுகளும் சமுதாய விரோத சக்திகளாகக் கருதின. அதற்காக அவர்களைத் தண்டித்தன. சூதாட்டத்தின் தீமைகள் புதிதானவையல்ல. இத் தீமையைத்தான் மகாபாரதம் சித்திரிக்கிறது. யுதிஷ்டிரன், நளன் இவர்களுடைய துயரக் கதைகளுக்குச் சூதாட்டமே காரணம்.

தனி மனிதர்கள் சூதாட்டம் நடத்துவதைத் தண்டனைக்குரியதாக நாகரிக நாடுகள் கருதுகையில், இந்தியாவில் ஐந்து ராஜ்யங்களின் அரசாங்கங்களே சூதாட்டம் நடத்துவதைப் பற்றி என்ன சொல்ல? அரசாங்கங்கள் லாட்டரித் திட்டத்தை தங்களுக்கு மட்டுமே ஏகபோக்கியமாக்கிக்கொண்டு சூதாட்டத்தை வளர்த்து வருகின்றன. லட்சோபலட்சமாக அதிருஷ்டச் சீட்டுக்கள் எல்லா மக்களுக்கும் விற்கப்படுவதை என்னென்பது?

இதில் தலையிடுவதற்கு மத்திய சர்க்கார் மனம் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. ராஜ்ய சர்க்கார்களுக்கு அரசியல் சாஸனம் அளிக்காத உரிமையை மத்திய சர்க்கார் தனது 'அநுமதி' மூலம் அளித்து விட்டது. இதைத் தில்லி மாற்றும் எனத் தோன்றவில்லை. எனவே ராஜ்ய சர்க்கார்கள் நடத்துகிற சூதாட்டம் இந்திய தேசத்தின் வாழ்வில் ஒரு நிரந்தர அங்கமாகி, அதன் அத்தனை தீய விளைவுகளும் சாசுவதமாகி விடும் எனத் தோன்றுகிறது.

# என்ன சேதி?

## பட்நாயக் பூச்சாண்டி

"இன்றுள்ள சுதந்திரா சர்க்கார், தொழிலதிபர்களை வரவழைத்து உடன் படிக்கை செய்து கொண்டு புதுத் தொழில்கள் தொடங்கி நடத்தினால், பின்னால் காங்கிரஸ் பதவிக்கு வந்தால் அந்த ஒப்பந்தங்களை யெல்லாம் ரத்து செய்துவிடும்!" என்று பிஜு பட்நாயக் தொழிலதிபர்களைப் பய முறுத்தியிருக்கிறார்.

எந்தச் சர்க்காரும், தனக்கு முந்தைய சர்க்கார் எவ்வளவுதான் பிடிக்காத சர்க்காராயினும் அது செய்து கொண்ட ஒப்பந்தங்களையும், அளித்துள்ள வாக்குறுதிகளையும் நிறைவேற்றி வைப்பதே உலகெங்கிலுமுள்ள ஜனநாயக சம்பிரதாயம். இந்தச் சம்பிரதாயம் இருப்பதாலேயே, அந்நிய சர்க்கார்களும் இருபதாண்டு தவணைக் கடன்கள், நாற்பதாண்டு தவணைக் கடன்கள் என்று பெருந் தொகைகளைக் கடனாக அளித்து உதவி செய்கின்றன. பிஜு பட்நாயக் போல் ஆட்சியாளர்கள் கூறுவார்கள் என்று தெரிந்தால் பாரத தேசம் முன்னேற யாரும் உதவவே முடியாமல் போயிருக்கும்.

பிஜு பட்நாயக் தமது அஞ்ஞாத வாசத்தை விட்டு மீண்டும் அரசியலுக்கு வருவதற்குக் காரணமே, ஒரிஸ்ஸாவிலுள்ள சுதந்திரா — ஜனகாங்கிரஸ் கூட்டாட்சியின் கீழ் புதிதாகத் தொழில்வளம் பெருகாததனால் இதைக் கவிழ்த்து காங்கிரஸ் ஆட்சியை நிலைநாட்டத்தான் எனக் கூறுகிறார்.

ஒரிஸ்ஸா கஜானாவும்; மத்திய சர்க்கார் கஜானாவும் காலி. வெளிநாட்டு உதவி வருவதும் நின்று விட்டது. இத்தகைய சூழ்நிலையில் தொழில் வளம் எப்படிப் பெருகும்? இருப்பினும் முதன்மந்திரி ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் பம்பாயிலும், கல்கத்தாவிலும் உள்ள தொழிலதிபர்களை இறைஞ்சிக் கேட்டுப் பின் தங்கிய ஒரிஸ்ஸாவில் தொழில்கள் பெருக்க முயன்று வருகிறார். அந்தத் தொழிலதிபர்கள் ஒரிஸ்ஸாவில் தொழில்கள் ஆரம்பிக்காமலிருக்க, ஸ்ரீ பட்நாயக் வீண் மிரட்டல்களும் பயமுறுத்தல்களும் புரிந்து வருகிறார். ஒரு பக்கம் தொழில் பெருகவில்லை என்று குறை கூறிக் கொண்டு, மற்றொரு புறம் தப்பித் தவறி வரக்கூடிய முதலீடுகளையும் வரவிடாமலிருக்கக்கூடிய முயற்சிகளை பிஜு பட்நாயக் மேற்கொண்டிருக்கிறார்.

எனினும், பிஜு பட்நாயக் பேச்சில் ஒரு நன்மை விளையலாம். காங்கிரஸ் மீண்டும் பதவிக்கு வந்தால், சுதந்திரா அரசாங்கம் செய்து கொண்டிருக்கும் ஒப்பந்தங்களை ரத்து செய்து விடும் என்று தொழிலதிபர்கள் பயந்து, காங்கிரஸ் பலம் பெருமளிருக்க என்னவெல்லாம் உண்டோ, அவ்வளவும் செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## பம்பாயில்

பம்பாய் நகரத்தில் மட்டும் இருநூறு கள்ளுக்கடைகளைத் திறக்கப் போகிறார்களாம். ஏழை பாட்டாளி மக்கள் குடும்பங்களில் இனி நித்திய கலவரமாக இருக்கும். காங்கிரஸ் சர்க்கார் இத்தகைய அநியாயமான செயலுக்கு முன் நிற்கிறது!

காந்தி நூற்றாண்டு விழாக் கொண்டாடும் லட்சணத்தைப் பற்றி என்னவென்று சொல்ல?

## ஜனநாயக மரபு எங்கே?

டில்லி மக்கள் சபையில் மத்திய சர்க்கார் ஊழியர்கள் வேலை நிறுத்தத்தின் மீது வந்த நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைப் பற்றி எழுந்த விவாதத்துக்குப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி பதில் அளிக்க எழுந்தபோது, இடதுசாரி கம்யூனிஸ்ட் அங்கத்தினர்களும் எஸ். எஸ். பி. அங்கத்தினர்களும் ரகளை செய்து அவரைப் பேச விடாமல் செய்து விட்டனர். எவ்வளவுதான் அபிப்பிராய பேதமிருப்பினும், பிரதமர் கூற்றைக் கேட்க வேண்டியது எதிர்க்கட்சியாளர்களின் கடமை, பண்பு, ஜனநாயக சம்பிரதாயம். பிரதமர் பதில் சொல்லாமலே, ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மான விவாதம் முடிந்தது ஜனநாயக சம்பிரதாயத்தில் ஒரு புதுமை!

கம்யூனிஸ்டுகள், ஜனநாயகவாதிகள் போல் சட்டசபைகளுக்கும், பார்லிமெண்டுக்கும் நின்று போட்டி இட்டாலும், அவர்களுக்கு அதில் சிறிதும் நம்பிக்கை கிடையாது என்பது டில்லி மக்கள் சபையில் நடந்த விவகாரத்திலிருந்து புரிந்து விட்டது!

## எழுத்துக்குப் பரிசு

இலக்கிய வளர்ச்சியைப் பெரு நோக்காகக் கொண்டு தமிழக அரசு ஆண்டு தோறும் சிறந்த நூல்களுக்குப் பரிசு வழங்கி எழுத்துத் துறையில் ஈடுபட்டவர்களை ஊக்கி வருகிறது. 1964—65க்கான பரிசை இவ்வாண்டு பல்வேறு துறை எழுத்துக்கள் பெறுகின்றன. சிறுகதை — நாவலுக்கான பரிசைப் பிரபல எழுத்தாளர் திரு அகிலன் பெறுகிறார். பரிசு பெறும் நூல் 'கயல்விழி'.

இலக்கியத் தரமானவற்றையே தரும் 'கல்கி' பத்திரிகையில் வெளிவரும் எழுத்துக்களே பெரும்பான்மையான பரிசுகளைத் தட்டிக் கொண்டு போகின்றன என்பது வாசகர்கள் அறிந்ததே. 'கயல் விழி' என்னும் நவீனத்துக்குப் பரிசு பெற்றிருக்கும் திரு அகிலனைப் பாராட்டுவதுடன், 'கல்கி' நேயர்களுடன் இம்மகிழ்ச்சியைப் பங்கிட்டுக் கொள்வதில் பெருமை உறுகிறோம்.

கவிஞர் சுரதா 'தேன் மழை' என்னும் தமது கவிதைத் தொகுப்புக்குப் பரிசு பெறுகிறார்.

இப்படியே சட்டம், சுகாதாரம், விஞ்ஞானம், வரலாறு போன்ற பல்துறை இலக்கிய வடிவங்களுக்கும் தமிழ் நூல்கள் பரிசு பெற்றிருக்கின்றன — 'தமிழில் முடியுமா?' என்ற கேள்விக்கு 'முடியும்' என்று நிரூபிப்பதே போல.

தமிழக அரசின் பரிசளித்துப் பாராட்டும் இம்முறை பாராட்டத் தக்கதே. ஆனாலும், ஒரு விஷயத்தை நினைவுபடுத்த விரும்புகிறோம். ஓராயிரம் ரூபாய் பரிசளிப்பதைக் காட்டிலும், எழுத்தாளர்வர்க்கத்துக்கு ஊக்கம் அளிக்கச்

சிறந்த நூல்களைத் தேர்ந்தெடுப்பது போலவே, தமிழ் நாட்டின் நூலகங்களில் சிறந்த நூல்கள் இடம் பெறச் செய்ய வேண்டும். தனிமனிதன் புத்தகம் வாங்கிப் படிப்பது மிகவும் குறைவாயிருக்கும் இந்த நாளில், தமிழகம் முழுவதும் பரந்து விரிந்து கிடக்கும் நூலகங்களில் தரமான நூல்கள் இடம்பெறுமானால், எழுத்தாளர்களுக்கு ஆயிரம் ரூபாய்ப் பரிசைக் காட்டிலும் அதுவே பெரும் பரிசாக ஊக்கம் தரும்.

## வாழ்க தமிழ்நாடு!

இந்த இதழ் வெளியாகும் தேதியான டிசம்பர் 1, மிகமிக முக்கியமும் புனிதமும் வாய்ந்த நாளாகிவிட்டது!

'சென்னை மாநிலம்' என்றிருந்ததை 'தமிழ் நாடு' என்று மாற்றுவதற்கான மசோதாவை டில்லி மக்கள் சபையில் ஏகமனதாக எல்லாக் கட்சியினரும் சேர்ந்து நிறைவேற்றியிருக்கிறார்கள். இந்த மகிழ்ச்சிகரமான விஷயத்தை டிசம்பர் 1ந் தேதி தமிழகமெங்கும், ஏன் தமிழர்கள் எங்கெங்கு இருக்கிறார்களோ, அங்கெல்லாம் பெருவிழாவாகக் கொண்டாடுமாறு தமிழக முதலமைச்சர் திரு அண்ணாதுரை அறிக்கை விடுத்திருக்கிறார்.

ஒவ்வொரு ராஜ்யமும், அதனதன் மொழியை யொட்டி ராஜ்யப் பெயர் பெற்றிருந்தது. மராத்தி பேசும் மாநிலம் மகாராஷ்டிரம் என்றும், குஜராத்தி பேசும் மாநிலம் குஜராத் என்றும், வங்காளி பேசும் மாநிலம் வங்கம் என்றும் பெயர் பெற்றிருக்க, மொழிகளுக்குள்ளேயே மிக மூத்த மொழியாகிய கன்னித் தமிழைப் பேசும் மக்கள் வாழும் மாநிலம் மட்டும் சென்னை என்று அழைக்கப்பட்டு வந்தது பெரும் குறையாக இருந்துவந்தது.

அந்தக் குறை இனி இல்லை. ஆகவே, தமிழக முதலமைச்சர் கோரியபடி டிசம்பர் 1ந் தேதி அன்று தமிழ் கூறும் நல்லுலகிலுள்ள எல்லா மக்களும் கட்சி வேறுபாடு, சாதி சமய வேறுபாடு, மற்ற எந்த வேறுபாடுமின்றித் தேசியத் திருவிழாக் கொண்டாடுவோமாக!

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா!

## சென்னை கடற்கரை

சென்னைக்கு அழகு செய்யும் மெரினா கடற்கரையைப் பற்றி திரு கே. ஹநுமந்தையா சில நாட்களுக்குமுன் கூறிய வாசகங்கள் லட்சக்கணக்கான மக்களின் மன உணர்ச்சியைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது.

''இன்று காலை மெரினா கடற்கரையில் உலாவச் சென்றேன். அழகு என்பதற்கு முற்றும் மாறுபட்ட நிலையில் சென்னை கடற்கரை இருப்பதைக் கண்டு மிகவும் வருத்தமுற்றேன். மேனாட்டு யாத்திரிகர்களைக் கவர தேசம் பெரு முயற்சி செய்து வருகிறது. இச் சமயத்தில் சென்னை கடற்கரை இந்த லட்சணத்திலிருக்கிறது! நான் சொன்னதைத் தி. மு. க. அரசாங்கம் நல்லபடியாக எடுத்துக் கொண்டு கடற்கரையை அழகுபடுத்தும் என்று நினைக்கிறேன்'' என்றார்.

சென்னை நகர கடற்கரை உலகிலேயே அழகான கடற்கரைகளுள் இரண்டாவது ஸ்தானம் வகிப்பதாகச் சொல்வார்கள். அது இன்று துர்நாற்றத்துக்குப் பேர்போன இடமாக இருப்பது பரிதாபம். புதிய நகரசபையும் அரசாங்கமும் விரைவில் சென்னைக் கடற்கரையை அழகுபடுத்த முயற்சி எடுத்துக் கொள்ளும் என்று நம்புகிறோம்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

அத்தையம்மாள் தன் மருமகளைக் கண்டித்துப் பேசியிருப்பது சுவாரஸ்யமாயிருக்கிறது. கான்ஸாஸ் நகரத்திலிருந்து நவம்பர் 15ந் தேதியிட்டு வந்துள்ள செய்தி வருமாறு :

> பிரதம மந்திரி இந்திரா காந்தியைச் சுற்றி ஏராளமான அநுபவமற்றவர்கள் இருக்கிறார்கள் என்று ஸ்ரீமதி விஜய லக்ஷ்மி பண்டிட் கூறினார்.
>
> 'நாட்டின் இன்னல்களைக் கடப்பதற்கு அவர்கள் இந்திராவுக்கு உதவியாக இருப்பார்களா என்பதில் எனக்குச் சந்தேகமே' என்றும் அவர் கூறினார்.
>
> நிக்ஸன் ஜனாதிபதியாகத் தேர்வு செய்யப்பட்டிருப்பது குறித்து அவர், "ஸ்ரீ நிக்ஸனை நான் நன்கு அறிவேன். அவரது பதவிக் காலத்தில் இந்தியாவுக்கு எல்லா உதவிகளையும் நிறுத்துவது பற்றி அவர் எண்ணக்கூடிய சந்தர்ப்பமே நிகழாது என உறுதியாக நம்புகிறேன்" என்றார்.
>
> "இருப்பினும், ஹ்யூபர்ட் ஹம்ப்ரி ஜனாதிபதியாகியிருந்தால் அதை இந்தியா சிலாக்கியமாகக் கருதியிருக்கும். ஏனெனில், குடியரசுக் கட்சியினரைவிட, ஜனநாயகக் கட்சியினரே ஏனோ இந்தியாவுக்கு அதிக உதவியாயிருந்திருக்கிறார்கள். ஆனால் இப்படி நான் சொல்வது ஸ்ரீ நிக்ஸனைக் கண்டிப்பதாகாது" என்றார்.

இந்தியாவுக்காக டாலர்களைச் செலவழிப்பதில் ஸ்ரீ நிக்ஸன் அதிக அக்கறை காட்டமாட்டார் என்பதாலேயே, மற்றவரைவிட அவர் இந்தியாவின் சிறந்த நண்பர் எனலாம். நிறைய டாலர் கொடுத்து இந்தியா திட்டங்களை ஒழுங்கின்றி வகுக்கவும், பொருள் விரயம் செய்யவும் வழி செய்யாமலிருப்பதே நம் நாட்டிடம் காட்டும் நட்பு அல்லவா ?

❖❖❖

சுதந்திர முதலீட்டுக் கழகம் வெளியிட்டுள்ள ஷ்ராஃப் நினைவுச் சொற்பொழிவு நூலில் ஸ்ரீ வி. பி. கார்னிக்கின் கட்டுரை காணப்படுகிறது. தொழிலாளரின் உரிமையில் மிகவும் ஈடுபட்டிருந்த எம். என். ராய் அவர்களின் நெருங்கிய சகாவாகிய இவர் கூறுவது கவனத்துக்குரியது. கேரோ செய்வது சட்ட விரோதமானது என்று இவர் அழுத்தமாகக் கூறுகிறார். இந்த அசங்கியமான மறியல் முறை சட்டத்துக்கு உகந்த தொழிற்சங்க நடவடிக்கைகளுக்கு ஊறு விளைவிக்கிறது என்கிறார். கல்கத்தா உயர்நீதி மன்றத்தின் நீதிபதிகள் குழு இவ்விஷயத்தை விரிவாக ஆராய்ந்து, கேரோக்கள் சட்ட விரோதமானவை என்று ஏகமனதாகத் தீர்ப்புத் தந்தது. ஆனால் இடதுசாரிக் கம்யூனிஸ்ட் தலைவர் ஒருவர் இத்தீர்ப்பு, 'வர்க்க பேதம் நிறைந்த ஒரு சமுதாயத்தின் வர்க்க பேதத் தீர்ப்பு' என்கிறார். இந்தியாவின் குற்றச் சட்டமே கம்யூனிஸ்ட்களின் கண்களில் மதிப்புக்குகந்ததாகத் தெரியவில்லை !

❖❖❖

மருந்து கொடுத்து நோயைக் குணப்படுத்த முடியாத போது ரண சிகித்சை செய்வார்கள். இதில் நோவு கண்ட அங்கத்தையே வெட்ட நேருவதும் உண்டு. காலோ, கையோ, உணவுக் குழாயோ ஆயின் இவ்வாறு வெட்டலாம். ஆனால் தலையை வெட்ட முடியாது. அதற்குப் பரிகாரம் காண்பதும் வியாதிக்குப் பரிகாரம் காண்பது போல் தான். இதிலும் தலையை வெட்ட முடியாதது போல் சில நடவடிக்கைகளை எடுக்க முடியாது. சர்க்கார் ஊழியரின் வேலை நிறுத்தம் அப்படிப்பட்டதுதான்.

அரசாட்சியின் அத்தியாவசிய அம்சங்கள் என்ன, ஒழுங்கான சமுதாய வாழ்க்கையின் தேவை என்ன என்பது மத்திய மந்திரிகளைவிடச் சர்க்கார் ஊழியர்களுக்கே நன்கு தெரியும். ஆயினும் அவர்கள், அச்சுறுத்தும் கோஷ்டிகள் தம்மைக் கையாள விட்டு விட்டனர். அச்சுறுத்தும் கோஷ்டியினரோ கம்யூனிஸ்ட்கள் தங்களைக் கையாள விட்டு விட்டனர். இதனால்தான் தவறான வழியில் காரியம் நடந்து எல்லா விதங்களிலும் பெரும் இன்னல் ஏற்பட்டது. 'நாம் ஆலைத் தொழிலாளிகள் அல்ல; நாம் தனியானதொரு வகுப்பினர்; நாம் கம்யூனிஸ்ட்களால் ஒரு போதும் நடத்திச் செல்லப்படக் கூடாதவர்' என்பதை சர்க்கார் ஊழியர்கள் உறுதியாக உணருவார்கள் என்று நம்புவோமாக !

குற்றமற்றவர்களும், பச்சாத்தாபப்படுகிறவர்களும் ஊழியர்களிடையே உண்டு. இருப்பினும் இவர்கள் கம்யூனிஸ்ட் தலைமையில் போர் முழக்கம் எழுப்பிய தங்கள் சகாக்களை எதிர்த்து முகம் கொடுக்கும் தைரியம் இல்லாததால் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கலாம். இவர்களுக்குத் தண்டனை இல்லாதவாறு பிரதமர் பார்த்துக் கொள்வார் என்று நம்புகிறேன்.

❖❖❖

புரட்சி நடந்த சூட்டோடு ஜனநாயகத்தின் வேகமும் போய் விடுகிறது. புரட்சியின் தீவிரம் அடங்கியபின், அரசியலறிவில்லாத மக்களுக்கு ஜனநாயக முறை இசைவாக இருப்பதில்லை. அளவு சரியில்லாத ஆடைகளை அணிந்தால் வேலை செய்வது சிரமம். வாக்காளரின் அரசியலறிவுக்குப் பொருந்தாத ஆட்சி முறை இப்படிப்பட்டதே ! முன்பு சம்ஸ்தான மன்னர்கள் திறன்மிக்க மந்திரிகளைக் கொண்டு நடத்திய ஆட்சி பிரபுத்துவ முறையைச் சேர்ந்தது; அது முற்றிலும் ஜனநாயகத்துக்கு மாறானது. ஆயினும் அந்த ஆட்சி நல்லாட்சியாக இருந்தது. இப்போதுள்ள அரசியல் எஜமானர்களை இன்றைய சம்ஸ்தானாதிபதிகள் என்று சொல்லலாம். ஆனால் இவர்கள் முந்தைய சம்ஸ்தான மந்திரிகளுக்கிருந்த ஆற்றல் பெற்றிருக்கவில்லை. ஆட்சியில் எங்கு தவறு நடக்கிறது என்று காணவும், அதைத் திருத்தவும் தேவைப்படுகிற அரசியலறிவு மக்களுக்கு இல்லை. இரையை நாடிச் சென்று எளிதில் தூண்டிலில் சிக்கி விடுகிறார்கள். நிர்வாகச் சீர்குலைவு நடக்க அநுமதித்து விடுகிறார்கள்.





தில்லியிலிருக்கும் பிரிட்டிஷ் ஹைகமிஷனர் ஸர் மாரிஸ் ஜேம்ஸ் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்தபோது தமிழக முதல் அமைச்சர் திரு அண்ணாதுரையையும், ராஜாஜி அவர் களையும் சந்தித்து அளவளாவினார். படத்தில் ராஜாஜி திரு மாரிஸ் ஜேம்ஸைத் தமது இல்லத்தில் வரவேற்கிறார்.

“குழந்தைகள் தின விழா” (நேருஜி பிறந்ததினம்)வையொட்டி குழந்தைகள் புத்தகக் கண்காட்சி யைத் திரு முத்தையா செட்டியார் அ வ ர் க ள் திறந்து வைத்தார்.





நெல்லை மாவட்டத்தில் நடந்த சுதந்திரக் கட்சி யின் மகாநாட்டில் கலந்துகொண்ட ஸ்ரீ தயாபாய் பட்டேல் ஸ்ரீ ஜி. கே. சுந்தரத்துடன் அளவளாவுகிறார்.

இதே மகாநாட்டின்போது ஸ்ரீ லக்ஷ்மணனும் ஸ்ரீ எஸ். எஸ். மாரிசாமியும் கலந்தாலோசிக் கிறார்கள். வலக்கோடியில் டாக்டர் மத்யாஸ்.

பம்பாய்க்கு வருகை தந்த ஜப்பானிய இந்தோ நட்புறவுக் குழுவினரை ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பரத நாட்டியக்கலாமந்திரைச் சேர்ந்தவர்கள் வரவேற்று பரதநாட்டிய விருந்து அளித்து மகிழ்வித்தனர்.



"அமெரிக்க ஜனாதிபதியாக இருந்து ஓய்வுபெறுவது என்பது விமானத்திலிருந்து பாராசூட்டைப் பிடித்துக் கொண்டு கீழே குதிப்பதைப் போன்றது" என்றார் முந்தைய அமெரிக்க ஜனாதிபதியான ஐஸன்ஹோவர். "பாராசூட் எங்கே கொண்டு போய்ச் சேர்க்கும் என்பது ஒருபுறமிருக்கட்டும்; முதலில் அது திறந்து கொள்ள வேண்டுமே!" என்றும் அவர் வேடிக்கையாகக் குறிப்பிட்டார்.

ஓய்வுபெற்ற அமெரிக்க ஜனாதிபதிகள் ஓய்வு காலத்தை எப்படிக் கழித்தார்கள் என்பது ரசமான விஷயம்.

ஓய்வுபெற்ற அமெரிக்க ஜனாதிபதிகளைத் தேடிக் கொண்டு நிறையப் பேர்கள் வருவார்களாம்; "உங்கள் ஞாபகார்த்தமாக ஏதாவது கொடுங்கள்!..." என்று கேட்பவர்கள் ஐம்பது சதவிகிதமென்றால், கையெழுத்துக்காகக் காத்து நிற்பவர்கள் மீதி ஐம்பது சதவிகிதம். ஞாபகார்த்தப் பொருள்களாக எல்லோருமே விரும்பிக் கேட்பது : வெள்ளை மாளிகையின் கதவுக் குமிழ்கள், ஸ்பூன்கள், கஃப்–லிங்குகள்.



# ஓய்வுபெற்ற ஜனாதிபதிகள்

ஜார்ஜ் வாஷிங்டன் ஜனாதிபதி பதவியிலிருந்து ஓய்வு பெற்றதும் பண்ணையாராக மாறிவிட்டார். அதாவது, மவுண்ட் வர்னனிலுள்ள தம்முடைய பண்ணையின் நிர்வாகப் பொறுப்பு முழுவதையும் தாமே ஏற்றுக் கொண்டு கவனம் செலுத்தினார்.



தொண்ணூறு வயது வரை வாழ்ந்த மாஜி ஜனாதிபதி ஜான் ஆடம்ஸுக்குக் காலாற நடப்பதில் கொள்ளை ஆசை. தினமும் மலைப் பாதைகளில் காலையிலும் மாலையிலும் மூன்று மைல்களுக்குக் குறையாமல் நடை பழகுவார்.

அவருடைய பிள்ளையான ஜான் க்வின்ஸி ஆடம்ஸ் (இவரும் ஒரு ஜனாதிபதிதான்) அவர்களுக்கு நீச்சலின் மீது மோகம். தினசரி விடிகாலையில் பொடோமாக் நதிக் கரையில் இவரைப் பார்க்கலாமாம்.

குரோவர் க்ளவ்லாண்ட் வழக்கறிஞராகப் பணியாற்றினார். அப்புறம் கொஞ்ச காலத்துக்குப் பிறகு இரண்டாம் தடவையாக ஜனாதிபதி பதவிக்கும் வந்தார்!

யுலிஸஸ் எஸ். கிரான்ட் என்பவர் சொந்தமாக வியாபாரம் செய்ய முனைந்து நொடித்துப் போனார். "ஒவ்வொரு மணி நேரமும் வேதனை நிறைந்த ஒரு வாரத்தைப் போல் இருக்கிறது எனக்கு!...." என்று வருத்தப்பட்டுக் கொண்ட இவர், தமது அந்திம காலத்தில் தம்முடைய 'நினைவு'களைப் புத்தகமாக எழுதிப் பணம் பண்ணவேண்டி வந்து விட்டது.



குதிரை சவாரிப் பிரியரான தாம்ஸ் ஜெபர்சன், தம்முடைய சொத்துக்களை யெல்லாம் அடமானம் வைக்கும்படி நேர்ந்து விட்டது. "புத்தகங்கள் இன்றி என்னால் உயிர் வாழ முடியாது" என்று முன்பு சொன்ன இவரே, ஐம்பது வருட காலத்தில் தாம் அரும்பாடுபட்டுச் சேகரித்த பதின் மூன்றாயிரம் புத்தகங்களை அரசாங்கத்துக்கே விற்கும்படி நேரிட்டது. இத்தனைக்கும் மத்தியில் அவர் பஃபல்லோ பல்கலைக் கழகத்தின் வேந்தராகவும் பணியாற்றினார்.

டெட்டி ரூஸ்வெல்ட் வெள்ளை மாளிகையை விட்டு வெளியேறியதும் முதல் காரியமாக ஆப்பிரிக்கக் காடுகளைத் தேடிக் கொண்டு ஓடினார் — வேட்டையாடுவதற்காக!



வில்லியம் ஹோவார்ட் டஃப்ட் எட்டு வருட காலம் யேல் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகவும் பிறகு அமெரிக்க சுப்ரீம் கோர்ட்டின் பிரதம நீதிபதியாகவும் இருந்தார்.

ஃபில்மோர் என்பவர் ஷேக்ஸ்பியர் நாடகங்களைத் தொழிற்சாலையில் பணிபுரியும் தொழிலாளர்களுக்குப் போதிக்க முன்வந்தார். அவருக்கும் சரி, பெஞ்சமின் ஹாரிஸனுக்கும் சரி, ஓய்வு காலத்தில்தான் காதல் அரும்பியது. இருவருமே காதலில் வெற்றி யடைந்தார்கள்!

கால்வின் கூலிட்ஜ் பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதிக் கொடுத்துப் பொழுது போக்கினார். ஹெர்பர்ட் ஹூவர் நிறையப் புத்தகங்களை எழுதிக் குவித்தார்.

ஐஸனோவர் நோய்ப் படுக்கையில் விழாத வரையில் மனத்தைப் பறிகொடுத்தவை : வேட்டையாடுதல், கால்ஃப், மீன் பிடித்தல், பிரிட்ஜ் ஆட்டம்.

மாஜி ஜனாதிபதிகளில் சிலர் வறுமையில் உழலும்படியும் நேரிட்டது. ஜேம்ஸ் மாடி ஸன் இருபதாண்டுகள் உழன்றார். ஜேம்ஸ் மன்ரோவின் சொத்துக்களைக் கடன்காரர்கள் பிடுங்கிக் கொண்டு விடவே, உறவினர்கள் தயவில் அவர் கடைசிக் காலத்தைக் கழிக் கும்படி நேர்ந்தது. ஆண்ட்ரூ ஜாக்ஸின் என்பவர் வாஷிங்டனை விட்டு வெளியேறிய போது அவரிடம் இருந்த தொகை: தொண் ணூறு டாலர்கள் ! ஜான் டேய்லர் என்பவர் சாலை அமைப்புப் பணியில் மேஸ்திரியாக வேலை பார்க்கும்படி நேர்ந்தது.

ஒரு நாட்டின் மாஜி ஜனாதிபதிக்கு இப் படிப்பட்ட அவமானம் நேர இடம் தரக் கூடாதென்பதற்காக 1958ல் அமெரிக்க அரசாங்கம் ஒரு வழி வகுத்திருக்கிறது. அதன்படி ஓய்வுபெறும் ஜனாதிபதிகளுக்கு ஆண்டுதோறும் இருபத்தையாயிரம் டாலர்கள் பென்ஷன் கிடைக்கும் ; இலவச தபால் வசதிகள் உண்டு ; உதவியாளர்களை அமர்த்திக் கொள்வதற்கெனத் தனியாக ஐம்பதாயிரம் டாலர்களும் கிடைக்கும்.

ஜான்ஸன் ஓய்வு பெறப் போகிறார். அவர் இனி என்ன செய்யப் போகிறார் என்பதை உலகம் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறது !

('காரனெட்'டில் வெளியான ஒரு கட்டுரை யைப் படித்துவிட்டுஎழுதியவர்: **எஸ்.வி.ஆர்.**)

<u>அட்டைப்பட விளக்கம்</u>

# கார்த்திகை தீபம்

**அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்..... —தாயுமானவர்**

**கா**ர்த்திகை மாதத்திலே தென்னாடுடைய சிவனை ஒளிமயமாகக் கண்டு வணங்கும் வழக் கம் நம்மிடையே தொன்று தொட்டு இருந்து வருகிறது.

இதற்கு முந்தைய ஐப்பசி மாதத்தில் தீபா வளியின்போது, கண்ணனை ஒளி வடிவத்தில் கண்டு மகிழ்கிறோம்.

வட நாட்டில் தீபாவளியின்போதுதான் தீப வரிசைகள் வைத்து வீட்டையும் கோயிலை யும் அலங்கரித்து வழிபடுவது வழக்கம்.

தென்னாட்டில் அம்மாதிரி வழிபடுவது கார்த்திகை மாதத்தில். அகல் விளக்குகளின் வரிசை வீட்டை யெல்லாம் அலங்கரிக்கும். குழந்தைகள் மத்தாப்புக்கள் ஏற்றி விளையாடு வார்கள். 'மாவலி' என்று காய்ந்த பனம் பூவைக் கொண்டு செய்யப்படும் ஒரு வாணத்தை நீளக் கயிற்றில் கட்டி, தலையைச் சுற்றி விளையாடுவதும், சொர்க்கப்பனை ஏற்று வதும் தென்னாட்டுக்கே உரிய முறையாகும்.

திருவண்ணாமலையில் லட்சோபலட்சம் மக்கள் ஜோதி வடிவிலே எந்நாட்டவர்க்கும் இறைவனான சிவனைக் கண்டு ''அண்ணா மலைக்கு அரோகரா!'' என்று எழுப்பும் பக்தி பூர்வமான கோஷம் மெய்சிலிர்க்க வைக்கும்.

ஆனந்த மயமாக பக்தி செய்வது ஹிந்து சமயம். இத்தகைய சமயத்தில் — இத்தகைய சமயம் புழங்கும் நாட்டில் — பிறந்ததற்காக ஒவ்வொரு இந்தியனும் பெருமை கொள்ள வேண்டும்.

இதோ, இவ்விதழ் அட்டையிலே, குழந்தை மகாலட்சுமி மத்தாப்பு ஏற்றி விளையாடிக் கார்த்திகை கொண்டாடி மகிழ்வதைக் காணுங்கள். ஒளி வட்டத்தையே உண்டாக்கி விட்டாள் சிறுமி. அதில்தான் எவ்வளவு மகிழ்ச்சி! இந்த அழகிய காட்சியை வண் ணப் புகைப்படமாகப் பிடித்துத் தந்தவர் திரு ஆர். பி. எஸ். மணி.



## மகாத்மா மணிமொழி

என்னைச் சுற்றியுள்ள அனைத்தும் எப்போதும் மாறிக் கொண்டே இருக்கின்றன. அழிந்து கொண்டே இருக்கின்றன. எனினும், இப்படி மாறும் அனைத்தின் அடிப்படையாக ஒரு மாறாத உயிர்ச் சக்தி இருக்கிறது என்பதை மங்கலாக உணர்கிறேன். அந்தச் சக்திதான் எல்லாவற்றையும் சேர்த்துப் பிடித்துத் தாங்குகிறது. அதுதான் அனைத்தையும் சிருஷ்டிக்கிறது, அழிக்கிறது, மீண்டும் சிருஷ்டிக் கிறது. இப்படி அனைத்துள்ளும் இருந்து இயக்கும் சக்தி அல்லது ஆன்மாதான் கடவுள். வெறும் புலன் களால் மட்டும் காண்கிற எதுவும் நிலைத்து நிற்க முடியாது. அவன் ஒருவனே என்றும் நிலையாய் இருக்கிறான்.

# எல்லைத் தகராறு

**தலையை ஒரு நாட்டிலும்**
**காலை வேறொரு நாட்டிலும்**
**வைத்துக் கொண்டு படுக்க முடியுமா?**
**'முடியும்' என்று நிரூபிக்கிறது இக் கட்டுரை.**

★

படம்: அமெரிக்கா - கனடா எல்லைப்புறத்தில் காணப்படும் இந்த அழகிய பாலத்துக்கருகேதான் 'இரட்டைக் கிராமங்கள்' உள்ளன.



ஜெட் விமான யுகத்தில் உலகம் சுருங்கி விட்டது எனக் கூறப்படுவதை அடிக்கடி கேள்விப்படுகிறோம்.

இருந்த போதிலும் விஸா, பாஸ் போர்ட், 'பி ஃபார்ம்' ஆகியவற்றின் துணையில்லாமல் எண்ணிய மாத்திரத்தில் நாம் நினைத்த தேசத்துக்குப் போய்விட முடிகிறதா? முடியாதுதான். ஆனால் விளையாட்டுப் போதில் தான் வசிக்கும் நாட்டையே மாற்றிக் கொள்ளக்கூடிய சக்தி இன்று உலகில் சுமார் மூவாயிரம் நபர்களுக்கு இருக்கிறது! அவர்கள் வசிக்கும் இடம் ''இரட்டைக் கிராமங்கள்'' என்று பிரசித்தி பெற்றது. இக் கிராமங்களில் வசிப்பவர்கள் மிகமிக சுலபமாகத் தலையை அமெரிக்காவிலும் காலைக் கனடாவிலும் வைத்துக் கொண்டு படுத்துக் கொள்ளலாம்!

உலகில் வேறெங்குமில்லாத இந்த அதிசயமான விசேஷ உரிமைகள் ராக் ஐலண்ட், டெர்பி லைன் என்ற இந்த இரட்டைக் கிராமங்களுக்கு எப்படிக் கிடைத்தது? அவை இரண்டும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் கானடாவுக்கும் இடையே உள்ள எல்லைக் கோட்டின் மேலேயே அமைந்திருப்பதுதான் காரணம்! இரண்டு நாடுகளுக்கும் இடையே உள்ள எல்லையில் இந்தக் கிராமங்கள் ஏற்பட்டிருப்பதால் இதுவரை எத்தனையோ விசித்திரமான சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன.

சான்றாக ஸ்ரீமதி எல்ரிக் கார்டோ என்ற கனடிய மாதைக் கனடா நாட்டு வரிவசூல் அதிகாரி ஒருவர் அம்மாது பயன்படுத்தும் டெலிவிஷன் செட்டுக்கு வரி கட்டும்படி நிர்ப்பந்தித்த போது அவர் என்ன செய்தார் தெரியுமா? கனடா நாட்டுப் பகுதியில்- அதாவது வீட்டின் முன்பக்க அறையில் — இருந்த டெலிவிஷனை எடுத்துப் பின்பக்கப் பகுதியில் அதாவது அமெரிக்கப் பகுதியில் — கொண்டு வந்து வைத்து விட்டார். அதனால் அவர் சுலபமாக அரசாங்கத்தை ஏய்க்க முடிந்தது!

மற்றொரு சமயம் ஸ்ரீமதி கார்டோ குடும்ப விஷயமாக மாண்ட்ரியல் நகருக்குச் சென்று திரும்பும் வேளையில் ஒரு கிளியைக் கொண்டு வந்தார். 'இரட்டைக் கிராமங்'களில் உள்ள கனடியக் குடியேற்ற அதி

காரிகள் கிளியை அமெரிக்கப் பகுதிக்கு அமெரிக்கப் பொதுநல அதிகாரிகளின் உத்தரவு இல்லாமல் கொண்டு வரக்கூடாது என அவருக்கு நினைவூட்டினார்கள். ஸ்ரீமதி கார்டோவின் வீட்டில் சமையல் அறை, கனடா பகுதியில் இருந்ததால் அவர் அமெரிக்க அதிகாரிகளுக்குப் பயப்படாமல் கிளியைச் சமையலறையில் வைத்துக் கொண்டார். இரண்டு ஆண்டுகள் வரை சமையலறையிலேயே கின்னே மொழி பேசிக் கொண்டிருந்த கிளி திடீரென நோய்வாய்ப்பட்டது. ஸ்ரீமதி கார்டோ கிளியின் இருப்பிடத்தைச் சமையலறையிலிருந்து சாப்பாட்டு அறைக்கு மாற்ற எண்ணினார். ஆனால் அப்பகுதி அமெரிக்க பூமியில் இருந்தது. அதனால் அவர் அமெரிக்க அதிகாரிகளுக்கு எழுதிக் கேட்டு அனுமதி பெற்ற பிறகே கிளியின் இருப்பிடத்தை மாற்றினார்.

இந்தக் கிராமங்களில் வசிக்கும் பலருக்கு எது அமெரிக்கப் பகுதி, எது கனடா பகுதி என்று சரிவரத் தெரிவதில்லை. அதனால் அவர்கள் இரவில் உறங்கும்போது புரண்டு புரண்டு படுக்கும்போது தத்தம் நாட்டையே மாற்றிக் கொள்ளுகிறார்கள்.

இந்த விசித்திரமான இரட்டைக் கிராமங்களில் முதன் முதலாகக் குடியேறியவர் ஜான்ஸன் டாப்லின் என்ற அமெரிக்கர். 1796ம் ஆண்டில் அவர் தாம் அமெரிக்கப் பகுதியில் இருப்பதாக நினைத்துக் கொண்டு சொந்தமாக ஒரு வீட்டைக் கட்டி அதில் தம் குடும்பத்தோடு வாழ்ந்தார். அவரைத் தொடர்ந்து நூற்றுக்கணக்கானோர் வரத் தொடங்கினர்.

1812ம் ஆண்டில் இரட்டைக் கிராமங்களில் வாழ்ந்த மக்களுக்கு ஒரு பெரும் பிரச்னை ஏற்பட்டது. அமெரிக்காவும் பிரிட்டனும் ஒன்றின் மீது ஒன்று போர் தொடுத்த காரணத்தால் கிராமவாசிகள் போரில் யார் பக்கம் சேருவது என்று அறியாமல் திகைத்தார்கள். ஆனால் கிராமத்தில் உள்ள வயது முதிர்ந்த பெரியவர்கள் எங்கோ நடக்கும் போரில் கிராமவாசிகளின் உயிர்களைப் பலி கொடுக்க விரும்பவில்லை. அதனால் அவர்கள் ஒன்று கூடி, லண்டன், வாஷிங்டன், ஒட்டாவா ஆகிய எந்த நகரத்திலிருந்து வரும் எந்த விதமான ராணுவ ஆணைகளையும் மதிப்பதில்லை எனவும் கிராமவாசிகள் ஒருவருக்கெதிராகப் போர்க் கருவிகளைப் பயன்படுத்தக் கூடாது எனவும் ஏகமனதாகத் தீர்மானித்தனர். வரலாற்றுப் பிரசித்தி பெற்ற அமெரிக்க — பிரிட்டிஷ் போர் தங்களைப் பாதிக்க விடவில்லை அவர்கள்.

அமெரிக்கநாட்டுச் சட்டங்களானாலும் சரி, கனடா நாட்டுச் சட்டங்களானாலும் சரி, இந்தக் கிராமங்களில் அவற்றைச் சரிவர அமல் செய்ய முடிவதில்லை. காரணம்? எல்லையினால் வந்த தொல்லை! பல ஆண்டுகளுக்கு முன்பு அமெரிக்காவில் மதுவிலக்கு அமலில் இருந்து வந்தபோது இங்குள்ளவர்கள் மதுபான வகைகளைக் கனடா பகுதியிலும் மேறை நாற்காலிகளை அமெரிக்கப் பகுதியிலும் வைத்து மதுபான விடுதிகளை நடத்தினர். அமெரிக்கப் போலீஸ் அதிகாரிகள் யாரையுமே மது அருந்திய குற்றத்துக்காகத் தண்டிக்க முடியவில்லை!

— அ. இராமதுரை

---



## பட்டம் விடும் சிறுவன்

ஒரு சமயம் பம்பாயில் இரவில் பல நட்சத்திரங்கள் வானத்தில் ஆடி அசைந்து செல்வதைக் கண்டேன். இதைப் பற்றி விசாரித்ததில் இவை சிறுவர்களால் வானத்தில் விடப்பட்ட விளக்குகள் எனத் தெரியவந்தது.

''வானத்தில் விளக்குகளை விடுவது மிக சுலபம்'' என்கிறான் படத்தில் உள்ள சிறுவன் ரமேஷ். இதற்குத் தேவையானவை பட்டம் நூல் கண்டு, மெழுகுவத்தி, பேப்பர் விளக்கு கூடு ஆகியவை. முதலில் பட்டத்தை வானத்தில் உயர பறக்க விடவும். சிறிது உயரம் சென்றவுடன் பட்டம் ஒரே சீராகப் பறக்கும். இப்பொழுது எரியும் மெழுகு வத்தியைப் பேப்பர் விளக்குக் கூட்டில் பொருத்தி, அதைப் பட்டத்தை இழுத்துச் செல்லும் நூலில் கட்டவும். பிறகு மெதுவாக நூலை விடுங்கள். பட்டம் உயரச் செல்லச் செல்ல விளக்கையும் இழுத்துச் செல்லும். இதைப் பார்க்க மிக வேடிக்கையாக இருக்கும். விளக்கு அணையாமல் பட்டத்தை மறுபடியும் இறக்குவதில் தான் சாமர்த்தியம் தேவைப்படும்.

புகைப்படமும் தகவலும்: ராஜா

# ஃபாஸ்ஃபோமின்



சக்தியை அதிகரிக்கிறது.



பசியைத் தூண்டுகிறது.



வலிவைப் பெருக்குகிறது.

நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

**சுருங்கச் சொன்னால் —
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்**




ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும், பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய, பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும். ஸாராபாய் கெமிக்கல்ஸ் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS

Shilpi SC 30 A /67 Tam

# காப்பி அடிக்கப்பட்ட கவிஞர்



''டில்லிக்குப் போனேன்,
நேருவைப் பார்த்தேன்.
சல்யூட் அடித்தேன்,
சாக்லேட் தந்தார்.

பிஞ்சுக் குழந்தைகளின் நெஞ்சிலே நிறைந்தவரைப் பற்றிய இந்தக் கண்ணிகளை ஆயிரக்கணக்கான குழந்தைகள் அடிக்கடி சொல்லி வருகின்றனர். சிறுவர் பத்திரிகைகளில் குறைந்தது மூன்று முறை அச்சான பாடல். ஆனால் ஒரு முறைதான் சரியான ஆசிரியரின் பெயருடன் வந்தது — **'குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா'** என்று.

இவரது பாடல்களைப் பிறர் சொந்தம் கொண்டாடிய நிகழ்ச்சிகள் சுவையானவை.

பெண்களுக்கென்றே வெளியாகும் ஒரு பத்திரிகையில் வள்ளியப்பாவின் பாடல் வெளிவந்தது. வேறொருவர் பெயரில். அது அரசாங்கத்தின் ஆதரவில் வெளியான வெளியீடாதலால் இந்தக் குறையை உடனே கட்டிக்காட்டினார் குழந்தைக் கவிஞர். சில நாளில் அவருக்கு ஒரு கடிதம் வந்தது. பிரித்துப் பார்த்தால், இப்படி இருந்தது :

> ''வேறொருவர் எழுதிய 'எங்கள் பாட்டி' என்ற பாடலை நீர் உமது பெயரில் அனுப்பி எம்மை ஏமாற்றி விட்டீர். இது அழகன்று. ஒரு வாரத்துக்குள் இந்தத் தவற்றுக்கு மன்னிப்புக் கேட்டுப் பதில் அனுப்பாவிடில் எங்கள் இதழில் இது பற்றி அறிவிக்க நேரிடும்!''

அதே நேரத்தில், காப்பி அடித்த தூத்துக்குடியாருக்குப் போன கடிதத்தின் வாசகம் இப்படி இருந்ததோ என்னவோ: ''ஐயா, உமது பாடலை வேறொருவர் தமது பெயரில் அனுப்ப, அதை நாங்கள் தவறுதலாக வெளியிட்டு விட்டோம். மன்னிக்கவும்.''

☐ சில ஆண்டுகளுக்கு முன்பு குழந்தைகள் தினத்தில் நேருவுக்குச் சென்னை ஸ்டேடியத்தில் வரவேற்பு அளித்தது நினைவிருக்கிறதா? அந்த வரவேற்பில், அத்தனை ஆயிரமாயிரம் குழந்தைகளும் பாடுவதற்காக ஒரு பாடல் தேவைப்பட்டது. கல்வி அதிகாரிகளின் வேண்டுகோளுக்கு இணங்க, சில பள்ளிக்கூடங்கள் இதற்கென முயன்றன. ஒரு பிரபல பள்ளிக்கூடத்தினர் அனுப்பிய பாடலே சிறந்தது என்று தேர்ந்தெடுத்தனர். எல்லாக் குழந்தைகளுக்கும் அதைக் கற்பிக்க, பிரதி எடுத்து எல்லாப் பள்ளிக்கூடங்களுக்கும் அனுப்பினார்கள்.

அடுத்த நாள் முதல் திரு வள்ளியப்பாவுக்கும் கல்வி அதிகாரிகளுக்கும் பலரும் தகவல் சொன்னார்கள் : சில ஆண்டுகளுக்கு முன்பு அவர் இயற்றிய ''மலரும் மாணிக்கம்'' பாடலே அது, கடைசி வரியில் சில மாற்றங்களுடன் ! தர்மசங்கடத்தில் குழம்பிய அதிகாரிகளின் கவலையைப் போக்கும் விதத்தில், திரு வள்ளியப்பா மௌனமாக அனுமதி அளித்து விட்டார். வரவேற்பு வைபவத்தில் வாழ்த்துப் பாடல் குதூகலத்துடன் ஒலித்தது !

☐ வீட்டு வாசலில் கேவிக் கேவி நிற்கிறாள் ஒரு சிறுமி. அழுகையை நிறுத்த ஆதரவாகப் பேசி, கவிஞர் விசாரித்து அறியும் விவரம் இது : பள்ளிக்கூட ஆண்டு மலரிலே அவள் பெயரில் மூன்று பாடல்கள் வந்துள்ளன. மூன்றும் அழ. வள்ளியப்பா இயற்றியவை. தன் பெயரில் எழுதிவிட்டாள், அச்சும் ஆகிவிட்டது. பள்ளித் தோழிகள் (தோழிகளாவது, கோழிகள்!) வகுப்பு ஆசிரியையிடம் குட்டை உடைத்து விட்டார்கள். பள்ளித் தலைவிக்கும் விவரம் எட்டிவிட்டது. ''போ. அந்தக் கவிஞரிடம் போய் மன்னிப்பு வாங்கி வா'' என்று அவளை விரட்டினார்களாம்.

சிறுமியின் கையிலிருந்த பள்ளிக்கூட மலரை வள்ளியப்பா வாங்கிப் புரட்டிய போது, குறிப்பிட்ட மூன்று பாடல்களைத் தவிர இன்னும் இரண்டு பாடல்களை அடையாளம் கண்டு பிடித்தார். வழக்கம் போல் வேறு இரண்டு சிறுமிகளின் பெயரில் வந்திருந்தன. சிரித்து விட்டு, ''விவரம் தெரியாத சிறுமிகளின் விளையாட்டு இது. நான் மன்னித்து விட்டேன். தாங்களும் மன்னித்து விடுங்கள்'' என்று தலைமை ஆசிரியருக்குக் கடிதம் எழுதி அனுப்பினார்.

பரிசும் பாராட்டும் பெற்ற முப்பது குழந்தைப் புத்தகங்கள் இயற்றி, குழந்தைகள் உலகில் 'ஹிட்' ஆன ஐந்நூறு பாடல்களுக்கு மேல் வழங்கியுள்ள இந்தக் 'குழந்தைக் கவிஞர்' இந்நிகழ்ச்சிகளை நினைந்து மெல்ல நகைக்கிறார்.

''எந்தப் பெயரிலே அனுப்பினாலும் ஒரு பாடல் ஏற்கப்படுகிறது என்றால் அது நல்ல பாடல் என்ற தகுதியைப் பெறுகிறதல்லவா?'' என்று கேட்கிறார்.

— டி. எஸ். வி.




சோளக்கொல்லை பொம்மை

இது பழைய மாடல்,
நவீன மாடலைக்
காண வேண்டுமா?
(47ம் பக்கம் பார்க்கவும்)




# 18



## பிறந்தது எப்படி ?

விஞ்ஞானப் புதுமைகளில் பல, எதிர்பாராத நிகழ்ச்சிகளினால் கண்டுபிடிக்கப்பட்டவைதான். எதற்காகவோ ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கும்போது ஏற்படும் சிறிய நிகழ்ச்சிகள், வேறு எதிர்பாராத புதிய கண்டுபிடிப்புகளுக்கு வழி வகுத்துள்ளன. உதாரணமாக மின் விசையின் சக்தியை உலகம் இன்று அறிந்து கொள்வதற்குக் காரணமாக இருந்தது ஒரு தவளையென்றால் வியப்பாக இருக்கிறதல்லவா? பதினெட்டாம் நூற்றாண்டில் இத்தாலிய விஞ்ஞானியான டாக்டர் லூசி கால்வானி என்பவரின் சோதனைச் சாலையில் இந்த அற்புதம் நிகழ்ந்தது. அசைவற்ற நிலையான மின் விசையைச் சீர்படுத்தி ஆராய்ந்து கொண்டிருந்தபோது, மேஜை மீது சோதனைக்காக மயக்க நிலையில் வைக்கப்பட்டிருந்த தவளையின் காலைத் தன் கையிலிருந்த கத்தியால் தொட்டார். அந்தக் கால் அசைந்தது. அந்தச் சலனம் விஞ்ஞானி கால்வானியைச் சிந்திக்கத் தூண்டியது.

'மின்விசைக்குப் பொருள்களை நகர்த்தும் சக்தி உண்டா?' என்ற கேள்விக்கு விடை காணுவதில் முனையலானார் கால்வானி. தம் ஆராய்ச்சியின் மின் விசைக்கு மின்னலைப் பயன்படுத்தினார் கால்வானி. வானத்தில் மின்னல் பளிரிடும்போதெல்லாம் — ஒரு கம்பி உயிருள்ள தவளையின் காலோடு பிணைக்கப்பட்டிருந்ததால் — தவளை துள்ளிக் குதித்தது. கால்வானியின் கேள்விக்கும் விடை கிடைத்தது.

பின்னால் வந்த விஞ்ஞானிகள் கால்வானியின் கண்டுபிடிப்பிலே கவரப்பட்டு அதில் மேலும் ஆராயலானார்கள். வேறு முறையில் மின் விசையை உற்பத்தி செய்யும் யந்திரம் ஒன்றைத் தயாரிக்க முற்பட்டார்கள். இதன் முடிவிலே பிறந்ததுதான் பாட்டரி. மின் விசையைப் பயன்படுத்தி எத்தனையோ அற்புதங்கள் புரியும் ஆற்றல் இன்று வளர்ந்து கொண்டே இருக்கிறது. இத்தகைய அற்புத ஆற்றலுக்கு ஆதி காரணமாக இருந்தது ஒரு தவளை தானே!

## விந்தை உலகம்



'சீல்' என்று ஒரு வகைக் கடல் வாழ் பிராணி. இதை நீங்கள் பார்த்திருக்க முடியாது. படங்களில் சந்தித்திருக்கலாம். இந்தச் சீல்கள் தான் உலகிலேயே நீண்ட தூரத்துக்கு நீந்தும் ஆற்றல் படைத்தவை. அதுவும் அலாஸ்காவில் வாழும் சீல்களுக்கு இத்தகைய ஆற்றலாம். வஸந்தத்திலும் கோடையிலும் அலாஸ்காவின் பாறைகள் சூழ்ந்த தீவுகளில், இவை தாய்மைப்பேற்றை அடைகின்றன. மாரி காலம் ஆரம்பமாகும் போது தங்கள் குழந்தைகளுடன் கதகதப்பான சூழ்நிலையைத் தேடிக் கிளம்புகின்றன. மாரி காலம் முழுவதும் — எட்டு மாத காலம் — இந்தப் பெரிய பிராணிகள் கொஞ்சமும் களைப்படையாமல் எங்குமே தங்காமல் நீந்திக் கொண்டே இருக்கின்றன. சில வேளைகளில் ஒரே மூச்சில் தரையைத் தொடாமலே 6,000 மைல்கள் நீந்தி மறுபடி வஸந்தத்துக்கு அலாஸ்காவுக்குத் திரும்புகின்றன. விந்தையான நீச்சல் நிபுணர் தாமே இவை !

கீழேயுள்ள படத்தில் பன்னிரண்டு விஷயங்கள் தவறாக இருக்கின்றன.
அவை என்னென்ன என்று உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?



# துப்புத்துலக்க வாரீகளா?

பிரபல சினிமா நட்சத்திரம் சித்திரா தேவியைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. அவருடைய வீட்டில்தான் கொலை நடந்திருந்தது. கொலையுண்டதோ அவளுடைய கணவர்தான். விசாரணையின்போது இன்ஸ்பெக்டர் இளவழகனுக்கு இரண்டு விஷயங்கள் கிடைத்தன. ஒன்று குழப்பத்தையும் மற்றது ஆச்சரியத்தையும் உண்டாக்கியது. அத்தனை பிரபலமான நட்சத்திரம் சித்திரா தேவிக்கு இடது காது செவிடு என்ற உண்மைதான் வியப்பை அளித்தது. இடது பக்கத்தில் இடியோசை கூடக் கேட்காதாம்! அப்படியொரு டமாரச் செவிடா இத்தனை பிரபல நட்சத்திரம்? சினிமா உலகில் எல்லாமே நடக்கும். போகட்டும். வழக்குக்கு வருவோம்.

சித்திரா தேவி கூறினாள்: சம்பவத்தன்று நான் மேஜையடியில் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தேன். எனக்குப் பதினைந்தடி தூரத்தில் இடது பக்கத்தில் அவர் ஜன்னலோரமாக நின்று கொண்டிருந்தார் எங்கோ வெளியே பார்த்துக் கொண்டு. ஏதோ சந்தேகம் கேட்கத் திரும்பியபோது அவர் தரையில் விழுந்து கிடப்பதைக் கண்டேன். அவரது தலையிலிருந்து ரத்தம் ஓடிக் கொண்டிருந்தது. எனக்கு எந்த விதமான சத்தமும் கேட்கவில்லை.



ஒருவேளை சத்தம் இல்லாத துப்பாக்கி கொண்டு யாராவது ஜன்னல் வழியாக அவரைச் சுட்டிருக்கலாம். என் வலது பக்கத்துக் காது எல்லோரையும்போல் எதையும் துல்லியமாகக் கேட்கும் சக்தி படைத்தது. இடது பக்கத்திலே அவர் நின்றிருந்ததால் தான் என்னால் எதையும் கேட்க முடியவில்லை.

இன்ஸ்பெக்டர் இளவழகனுக்கு இந்த இடத்தில் தான் குழப்பம் ஏற்பட்டது. அவளுக்குக் கொலை பற்றி இன்னும் ஏதோ தெரியும். ட் டுச் சொல்ல மறுக்கிறாள். இளவழகனார் பிரபல துப்பறியும் புலியான சி. ஐ. டி. சந்துருவிடம் போனார். சித்திரா தேவியின் கணவர் கொலை வழக்கு விவரம் முழுவதையும் கூறினார். 'அவள் தனக்கு இடது காது செவிடென்பதை என்னால் நம்ப முடியவில்லை' என்றார் இன்ஸ்பெக்டர். துப்பறியும் புலி சி. ஐ. டி. சந்துரு புன்முறுவலுடன் கூறினார்: 'இரண்டு பேரும் சித்திராதேவியிடம் போகலாம். நீங்கள் வலது காதிலும், நான் இடது காதிலும் ஒரே நீளமான வெவ்வேறு வாக்கியங்கள் கொண்ட விஷயத்தைக் கூறுவோம். அவள் நீங்கள் கூறியதைத் தவறில்லாமல் திருப்பிக் கூறிவிட்டால் அவளுக்கு இடது காது செவிடல்ல' என்றார். இன்ஸ்பெக்டருக்குச் சந்துருவின் கூற்று இன்னும் குழப்பத்தையே கொடுத்தது. உங்களால் சந்துருவின் ஊகத்தை விளக்கி அவர் குழப்பத்தைப் போக்க முடியுமா?

## முடியுமே!

ஒரு மனிதர் தனது ஒரு பக்கக் காது செவிடு என்று பாசாங்கு செய்யும்போது அதன் உண்மையைக் கண்டறிய இரண்டு பேர் அவரது இருபக்கக் காதுகளிலும் வெவ்வேறு வார்த்தைகளைக் கூற வேண்டும். ஒரு காது உண்மையிலேயே செவிடானால் அக் காதில் சொல்லப்பட்ட விஷயத்தை அவரால் செவிமடுக்க முடியாது. மறு காதில் சொல்லப்பட்ட விஷயத்தை அவரால் செவிமடுத்து அதைத் திருப்பிச் சொல்ல முடியும். இரண்டு காதும் கேட்கும் மனிதர்களால் இரண்டு காதிலும் கூறப்பட்ட வெவ்வேறு விஷயங்களை உத்துணர்ந்து திருப்பிச் சொல்ல முடியாது. இது உண்மை. உங்கள் தோழர்களிடம் பரிசோதித்துப் பாருங்கள்.



## தப்பு...தப்பு...தப்பு!

உலகப் புகழ்பெற்ற தேவதைக் கதையான 'சிண்டரெல்லா'வை நீங்களெல்லாம் படித்திருப்பீர்கள். இது முதலில் பிரஞ்சு மொழியில்தான் எழுதப்பட்டது. பிறகுதான் ஆங்கிலத்தில் அதை மொழிபெயர்த்தார்கள். அந்தக் கதையின்படி நள்ளிரவு மணி பன்னிரண்டு அடிக்கும்போது சிண்டரெல்லா அரண்மனையிலிருந்து வீட்டுக்கு ஓடிவருகிறாள். அப்போது அவள் காலிலுள்ள ஒரு பூட்ஸ் நழுவி விழுந்து விடுகிறது. அது கண்ணாடியால் ஆன காலணி. அந்த ஒரு கண்ணாடி ஸ்லிப்பரைக் கொண்டு பின்னால் சிண்டரெல்லாவை இளவரசன் கண்டுபிடித்து மணக்கிறான் என்பது கதை. ஆனால் இதில் வரும் கண்ணாடி 'ஸ்லிப்பர்' தவறாக எழுதப்பட்டு விட்டது. கண்ணாடியால் பாத அணி பண்ண முடியுமா? பண்ணினாலும் அணிந்து நடக்க வசதிப்படுமா? பிரெஞ்சு மொழியிலிருந்து மொழிபெயர்க்கும்போது இந்தத் தவறு நேர்ந்து விட்டது. பிரெஞ்சு மொழியில் வாயர் - Vair என்று இருந்ததை (வாயர் என்றால் ஒருவகை மிருகத்தின் தோல் என்று பொருள். - Sable) தவறுதலாக, வெர்ரி (Verre) என்று படித்து மொழிபெயர்த்து விட்டார். (Verre என்றால் கண்ணாடி என்று பொருள்) ஆகவே, சிண்டரெல்லா கண்ணாடி ஸ்லிப்பர் அணிந்ததாக நாம் படிப்பது தப்பு-தப்பு-தப்பு!

### கண்டுபிடி

விடை: மீனுக்கு வால் இல்லை. 2. கன்றுக்குட்டி உடலில் தவறான கோடுகள். 3. பூவின் கீழுள்ள இலைகள் மாறுபட்டுள்ளன. 4. பூனையின் ஒரு பக்கத்து மீசையைக் காணோம். 5. சேவல் குஞ்சு வாத்தின் பாதம். 6. முள்ளம்பன்றியின் வால் 7. பறவையின் இறகுகள் மாறுபட்டுள்ளன. 8. பன்றியின் பின்னங் கால்களில் பாதம். 9. அதன் மாறுபட்ட வால். 10. நத்தையின் கூடு தவறு. 11. முயலின் முன்னங்கால்கள். 12. ஆப்பிளின் இலைகள்.



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

## நந்தினியின் ஊடல்

பெரிய பழுவேட்டரையர் கடைசியாகத் தமது மாளிகைக்குத் திரும்பிய போது நள்ளிரவு கழிந்து மூன்றாவது ஜாமம் ஆரம்பமாகியிருந்தது. வீதிப் புழுதியை வாரியடித்துக் கொண்டு சுழன்று சுழன்று அடித்த மேலக் காற்றைக் காட்டிலும் அவருடைய உள்ளத்தில் அடித்த புயல் அதிகப் புழுதியைக் கிளப்பியது. அருமைச் சகோதரனை அவ்வளவு தூரம் கடிந்து கொள்ள வேண்டியிருந்தது பற்றிச் சிறிது பச்சாத்தாபப்பட்டார். அவர் மீது தம்பி வைத்திருந்த அபிமானத்துக்கு அளவேயில்லை. அந்த அபிமானத்தின் காரணமாகத்தான் ஏதோ சொல்லி விட்டான். இருந்தாலும் சந்தேகக்காரன். எதற்காக அநாவசியமாய் நந்தினியைப் பற்றிக் குறைகூற வேண்டும்? மனித சுபாவம் அப்படித்தான் போலும். தான் செய்த தவறுக்குப் பிறர் பேரில் குற்றம் சொல்லித் தப்பித்துக் கொள்ள முயல்வது சாதாரண மக்களின் இயற்கை. ஆனால் இவன் எதற்காக அந்த இழிவான முறையைக் கடைப்பிடிக்க வேண்டும்? கைவசம் சிக்கியிருந்த அந்த மோசக்காரத் திருட்டு வாலிபனை விட்டு விட்டு, அதற்காக ஒரு பெண்ணின் பேரில், அதுவும் மதனியின் பேரில் குற்றம் சொல்லுவது இவனுடைய வீரத்துக்கும் ஆண்மைக்கும் அழகாகுமா? போனால் போகட்டும்! அதற்காகத்தான் அவன் வருந்தி மன்னிப்பும் கேட்டுக் கொண்டு விட்டானே? மேலும் அதைப் பற்றி நாம் எதற்காக நினைக்க வேண்டும்?

இருந்தாலும், அவன் கூறியதில் அணுவளவேனும் உண்மை இருக்கக் கூடுமா? ஒரு வேளை இந்த முதிய பிராயத்தில் நமக்குப் பெண் பித்துப் பிடித்திருக்குமோ? எங்கேயோ காட்டிலிருந்து பிடித்து வந்த ஒரு பெண்ணுக்காக, கூடப் பிறந்த சகோதரனை, நூறு போர்க்களங்களில் நமக்குப் பக்க பலமாயிருந்து போரிட்டவனை, பல முறை தன் உயிரைப் பொருட்படுத்தாமல் நமக்கு வந்த அபாயத்தைத் தடுத்துக் காத்தவனை அல்லவா கடிந்து கொள்ள வேண்டியிருந்தது? அப்படி என்ன அவள் உயர்த்தி? அவளுடைய பூர்வோத்திரம் நமக்குத் தெரியாது. அவளுடைய நடவடிக்கையும் பேச்சும் சில சமயம் சந்தேகத்துக்கு இட



மாகத்தான் இருக்கின்றன. சீச்சீ! தம்பியின் வார்த்தை நம் உள்ளத்தி லும் இத்தகைய குழப்பத்தை உண் டாக்கி விட்டதே! என்ன அநியாயம்? அவள் எப்படி நம்மிடம் உயிர்க்குயி ரான அன்பு வைத்திருக்கிறாள்? எவ்வளவு மட்டு மரியாதையுடன் நடந்து கொள்ளுகிறாள்? நம்முடைய காரியங்களில் எல்லாம் எவ்வளவு உற்சாகம் காட்டுகிறாள்? சில சமயம் நமக்கு யோசனைகள் கூடச் சொல்லி உதவுகிறாளே? இந்த அறுபது வயதுக்கு மேலான கிழவனைத் துணிந்து மணந்து கொண் டாளே, அதைப் பார்க்க வேண் டாமா? தேவலோக மாதரும் பார்த்துப் பொறு மைப்படும்படி யான அந்த சுந்த ரிக்குச் சுயம்வரம் வைத்தால், சொர்க்கத்தி லிருந்து தேவேந் திரன்கூட ஓடி வருவானே? இந்த உலகத்து மணி முடி வேந்தர் யார்தான் அவளை மணந்துகொள்ள ஆசைப்பட மாட் டார்கள்? ஆ! இந்தச் சுந்தர சோழன் கண் ணில் அவள் அகப் பட்டிருந்தால் போதுமே? அப்ப டிப்பட்டவளைப் பற்றி எந்தவிதத் திலும் ஐயப்படு வது எவ்வளவு மடமை? இளம் பெண்ணை மணந்து கொண்ட கிழவர்களுக்கு இல்லாத சந் தேகங்கள் எல்லாம் தோன்றி வாழ்க் கையை நரகமாக்கிக் கொள்வார்கள் என்று கேள்விப் பட்டிருக்கிறோம். உலக வாழ்க்கையில் அத்தகைய உதார



ணங்களைப் பார்த்து மிருக்கிறோம். அம்மாதிரி ஊரார் சிரிப்பதற்கு நம்மை நாமே இடமாக்கிக் கொள்வதா?

இருந்த போதிலும் சிற்சில விவரங்களை அவளுடைய வாய்ப் பொறுப்பில் கேட்டறிந்து கொள்வதும் அவசியந்தான். அடிக்கடி முத்திரை மோதிரம் வேண்டும் என்று கேட்டு வாங்கிக் கொள்கிறாளே, எதற்காக? அடிக்கடி தன்னந் தனியாக லதா மண்டபத்தில் போய் உட்கார்ந்து கொள்ளுகிறாளே, அது எதற்கு? யாரோ ஒரு மந்திரவாதி அடிக்கடி அவளைப் பார்க்க வருகிறதாகக் கேள்விப் படுகிறோமே, அவளே ஒப்புக் கொண்டாளே, அது எதற்காக? மந்திரவாதியிடம் இவள் என்னத்தைக் கேட்டறியப் போகிறாள்? மந்திரம் போட்டு இவள் யாரை வசப்படுத்த வேண்டும்? இதெல்லாம் இருக்க, கலியாணம் பண்ணியும் பிரம்மச்சாரி என்ற நிலையில் என்னை எத்தனை காலம் வைத்திருக்கப் போகிறாள்? ஏதோ விரதம், நோன்பு என்று சொல்கிறாளே தவிர, என்ன விரதம், என்ன நோன்பு என்று விளங்கச் சொல்கிறாள் இல்லை! கதைகளிலே வரும் தந்திரக்காரப் பெண்கள் தட்டிக் கழிக்கக் கையாளும் முறையைப் போலத்தானே இருக்கிறது? அதற்கு இனிமேல் இடம் கொடுக்கக் கூடாது! இன்றிரவு அதைப் பற்றிக் கண்டிப்பாகப் பேசித் தீர்த்துக் கட்டிவிட வேண்டியதுதான்!

பழுவேட்டரையர் அவருடைய மாளிகை வாசலுக்கு வந்த போது அரண்மனைப் பெண்டிரும் ஊழியர்களும் தாதியர்களும் காத்திருந்து வரவேற்றார்கள். ஆனால் அவருடைய கண்கள் சுற்றிச் சுழன்று பார்த்தும் அவர் பார்க்க விரும்பிய இளைய ராணியை மட்டும் காணவில்லை. விசாரித்ததில், இன்னும் லதா மண்டபத்தில் இருப்பதாகத் தெரிய வந்தது. அவர் மனத்தில், "நள்ளிரவு ஆன பிறகும் அங்கு இவளுக்கு என்ன வேலை?" என்ற கேள்வியுடன், தம்மை அலட்சியம் செய்கிறாளோ என்ற ஐயமும் கோபமும் எழுந்தன. சிறிது ஆத்திரத்துடனேயே கொடி மண்டபத்தை நோக்கிச் சென்றார்.

இவர் கொடி மண்டப வாசலை அடைந்த போது நந்தினியும் அவளுடைய தோழியும் எதிரே வருவதைக் கண்டார். அப்படி வந்தவள் இவரைக் கண்டதும் நின்று, அவரைப் பார்க்காமல், தோட்டத்தில் குடிகொண்டிருந்த இருளை நோக்கத் தொடங்கினாள். தாதிப் பெண் சற்று அப்பாலேயே நின்று விட்டாள்.

பழுவேட்டரையர் நந்தினியின் அருகில் வந்த பின்னரும் அவள் அவரைத் திரும்பிப் பார்க்கவில்லை. நந்தினியைக் கடிந்து கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டு வந்ததற்கு மாறாக அவளுடைய கோபத்தை இவர் தணிக்க முயல வேண்டியதாயிற்று!

"நந்தினி! என் கண்மணி! என்ன கோபம்? ஏன் பராமுகம்?" என்று கேட்டுக் கொண்டு, தம் இரும்பையொத்த கையை அவளுடைய தோளின் மீது மிருதுவாக வைத்தார்.

நந்தினியோ மலரினும் மிருதுவான தன் கர மலரினால் அவருடைய வஜ்ராயுதத்தை யொத்த கையை ஒரு தள்ளுத் தள்ளினாள். அம்மம்மா! மென்மைக்கும் மிருதுத் தன்மைக்கும் இத்தனை பலமும் உண்டா?

"என் உயிரே! உன் பட்டுக் கையினால் தொட்டு என்னைத் தள்ளினாயே, அதுவே என் பாக்கியம்! திரிகோண மலையிலிருந்து விந்திய மலை வரையில் உள்ள வீராதி வீரர் யாரும் செய்ய முடியாத செயலை நீ செய்தாய்! அது என் அதிர்ஷ்டம்! என்றாலும், எதற்குக் கோபம் என்று சொல்ல வேண்டாமா? உன் தேன் மதுரக் குரலைக் கேட்க என் காது தாபம் அடைந்து தவிக்கின்றதே?" என்று கெஞ்சினார் ஆயிரம் போர்க்களங்களில் வெற்றி கண்ட அந்த மகாவீரர்.

"தாங்கள் என்னைப் பிரிந்து போய் எத்தனை நாள் ஆயிற்று? முழுமையாக நாலு நாள் ஆகவில்லையா?" என்று சொன்ன நந்தினியின் குரலில் விம்மல் தொனித்தது. அது எத்தனையோ வாள்களையும் வேல்களையும் தாங்கி நின்றும் தளராத பழுவேட்டரையரின் நெஞ்சத்தை அனலில் இட்ட மெழுகைப் போல் உருக்கி விட்டது.

"இதற்காகத்தானா இவ்வளவு கோபம்? நாலு நாள் பிரிவை உன்னால் சகிக்க முடியவில்லையா? நான் போர்க்களத்துக்குப் போக நேர்ந்தால் என்ன செய்வாய்? மாதக் கணக்காகப் பிரிந்திருக்க நேரிடுமே?" என்றார்.

"தாங்கள் போர்க்களத்துக்குப் போனால் மாதக் கணக்கில் தங்களை நான் பிரிந்திருப்பேன் என்று எண்ணினீர்கள்? அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளுங்கள். தங்களுடைய நிழலைப் போல் தொடர்ந்து நானும் போர்க்களத்துக்கு வருவேன்...."

"அழகாயிருக்கிறது! உன்னைப் போர்க்களத்துக்கு அழைத்துப் போனால் நான் யுத்தம் பண்ணினால்

போலத்தான்! கண்மணி! இந்த மார்பும் தோள்களும் எத்தனையோ கூரிய அம்புகளையும் வேல் முனைகளையும் தாங்கியதுண்டு. அவ்வாறு ஏற்பட்ட காயங்கள் அறுபத்து நான்கு என்று உலகோர் என்னைப் புகழ்வதுமுண்டு. ஆனால் உன்னுடைய மிருதுவான மலர் மேனியில் ஒரு சிறு முள் தைத்து விட்டால், என்னுடைய நெஞ்சு பிளந்து போய்விடும். எத்தனையோ வாள்களும் வேல்களும் என்னைத் தாக்கிச் சாதிக்க முடியாத காரியத்தை உன் காலில் தைக்கும் சிறிய முள் சாதித்துவிடும். உன்னை எப்படி யுத்தகளத்துக்கு அழைத்துப் போவேன்? நீ இத்தனை நேரம் கருங்கல் தரையில் நின்றுகொண்டிருப்பதே எனக்கு வேதனையாயிருக்கிறது. இப்படி வா! வந்து உன் மலர்ப் படுக்கையில் வீற்றிரு! உன் திருமுகத்தைப் பார்க்கிறேன். நாலு நாள் பிரிவு உனக்கு மட்டும் வேதனை அளித்தது என்று நினையாதே! உன்னைக் காணாத ஒவ்வொரு கணமும் எனக்கு ஒரு யுகமாயிருந்தது. இப்போதாவது என் தாபம் தீர, உன் பொன் முகத்தைப் பார்க்கிறேன்!'' என்று கூறி, நந்தினியின் கரத்தைப் பற்றி அழைத்துக்கொண்டு போய் மஞ்சத்தில் உட்கார வைத்தார்.



நந்தினி தன் கண்களைத் துடைத்துக் கொண்டு பழுவேட்டரையரை நிமிர்ந்து பார்த்தாள். தங்க விளக்கின் பொன்னொளியில் அவளுடைய முகத்தில் மலர்ந்த முத்து முறுவலைப் பார்த்தார் தனாதிகாரி. ஆகா! இந்தப் புன்சிரிப்புக்கு மூன்று உலகத்தையும் கொடுக்கலாமே? மூன்று உலகமும் நம் வசத்தில் இல்லாதபடியால், நம் உடல் பொருள் ஆவி மூன்றையும் இவளுக்காகத் தத்தம் செய்யலாம்! ஆனால் இவளோ நம்மிடம் ஒன்றும் கேட்கிறாள் இல்லை! — இவ்விதம் எண்ணினார் அந்த வீராதி வீரர். அவளைக் கேள்வி கேட்பது, கடிந்து கொள்வது என்கிற உத்தேசம் போயே போய் விட்டது! நந்தினி காலால் இட்ட பணியைத் தலையால் நடத்தி வைக்கும் நிலைமைக்கு வந்து விட்டார்! எந்தவித அடிமைத்தனமும் பொல்லாததுதான்! ஆனால் பெண்ணடிமைத்தனத்தைப் போல் ஒருவனை மதி இழக்கச் செய்வது வேறொன்றுமில்லை!

''நாலு நாள் வெளியூரில் இருந்துவிட்டுத்தான் வந்தீர்களோ? திரும்பி வந்தவுடனே நேரே ஏன் இங்கு வரவில்லை? என்னைவிடத் தங்களுக்குத் தங்கள் தம்பிதானே முக்கியமாகிவிட்டார்!'' என்று கேட்டாள் நந்தினி. கேட்டுவிட்டுக் கள்ளக் கோபத்துடன் அவரைக் கடைக்கண்ணால் பார்த்தாள்.

''அப்படியில்லை, என் கண்மணி! வில்லிலிருந்து புறப்பட்ட பாணத்தைப் போல் உன்னிடம் வருவதற்குத்தான் என் மனம் ஆசைப்பட்டது. ஆனால் அந்த அசட்டுப் பிள்ளை — மதுராந்தகன் — சுரங்க வழியின் மூலமாகப் பத்திரமாகத் திரும்பி வந்து சேர்கிறானா என்று தெரிந்துகொள்வதற்காகவே தம்பியின் வீட்டில் தாமதிக்க வேண்டியதாயிற்று......''

''ஐயா! தாங்கள் எடுத்த காரியங்களிலெல்லாம் எனக்குச் சிரத்தை உண்டு. தங்கள் முயற்சி அனைத்தும் வெற்றி பெற வேண்டுமென்றுதான் நானும் ஆசைப்படுகிறேன். ஆனாலும் நான் ஏற வேண்டிய மூடு பல்லக்கில் ஓர் ஆண்பிள்ளையைத் தாங்கள் ஏற்றிக் கொண்டு போவதை நினைத்தால் எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. நாடு நகரங்களில் உள்ள ஜனங்கள் எல்லோரும் தாங்கள் போகுமிடமெல்லாம் என்னையும்கூட அழைத்துப் போவதாக எண்ணுகிறார்கள்....''

''அது எனக்கு மட்டும் சந்தோஷமளிக்கிறது என்றா நினைக்கிறாய்? இல்லவே இல்லை! ஆனால் எடுத்த காரியம் பெரிய காரியம். அதை நிறைவேற்றுவதற்காகச் சகித்துக் கொண்டு செய்கிறேன். மேலும், இந்த யோசனை கூறியதே நீதான் என்பதை மறந்துவிட்டாயா? உன்னுடைய மூடு பல்லக்கில் மதுராந்தகனை அழைத்துப் போகும்படி நீதானே சொன்னாய்! கோட்டையிலிருந்து போகும் போதும் வரும் போதும் அவனைத் தனியாகச்

சுரங்க வழியில் அனுப்பும் யுக்தியையும் நீதானே கூறினாய்?....''

'' என்னுடைய கடமையைத்தான் செய்தேன். கணவர் எடுத்திருக்கும் காரியத்துக்கு உதவி செய்வது மனைவியின் கடமை அல்லவா? ஏதோ எனக்குத் தெரிந்த யுக்தியைச் சொன்னேன். தங்களுக்கு அதனால்....''

''அது மட்டுமா செய்தாய்? இந்த மதுராந்தகன் உடம்பெல்லாம் விபூதியைப் பூசிக் கொண்டு ருத்ராட்ச மாலையை அணிந்து நமசிவாய ஜபம் செய்து கொண்டிருந்தான்! கோவில், குளம் என்று சொல்லிக் கொண்டு, 'அம்மாவுக்குப் பிள்ளை நான்தான்' என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தான்! அரசாள்வதில் ஆசை உண்டாக்க நாங்கள் எவ்வளவோ முயன்றும், முடியவில்லை. இரண்டு தடவை நீ அவனுடன் பேசினாய்; உடனே மாறிப் போய் விட்டான். இப்போது அவனுக்கு உள்ள இராஜ்ய ஆசையைச் சொல்லி முடியாது. தற்போது அவனுடைய மனோராஜ்யம் இலங்கையிலிருந்து இமயமலை வரையில் பரவி இருக்கிறது! பூமியிலிருந்து ஆகாசம் வரையில் வியாபித்திருக்கிறது. நம்மைக் காட்டிலும் அவனுக்கு அவசரம் தாங்கவில்லை. சோழ சிம்மாசனத்தில் ஏறத் துடித்துக் கொண்டிருக்கிறான். நந்தினி! அந்தப் பிள்ளை விஷயத்தில் நீ என்ன மாய மந்திரம் செய்தாயோ, தெரியவில்லை!.... ஆமாம். நீதான் இப்படிப்பட்ட மாய மந்திரக்காரியாயிருக்கிறாயே? வேறு மந்திரவாதியை நீ ஏன் அழைக்கிறாய்? அதைப் பற்றி அநாவசியமாக ஜனங்கள்....''

''அரசே! அதைப் பற்றி அநாவசியமாக யாரேனும் பேசினால், அப்படிப்பட்ட துஷ்டர்களின் நாக்கைத் துண்டித்துப் புத்தி கற்பிப்பது தங்கள் பொறுப்பு. மந்திரவாதியை நான் ஏன் அழைக்கிறேன் என்பதை முன்னமே சொல்லியிருக்கிறேன். தாங்கள் மறந்திருந்தால், இன்னொரு தடவையும் சொல்லுகிறேன். பழையாறையிலுள்ள அந்தப் பெண் பாம்பின் விஷத்தை இறக்குவதற்காகத்தான். நீங்கள் ஆண்மை உள்ள புருஷர்கள். யுத்தகளத்தில் நேருக்கு நேர் நின்று ஆண் பிள்ளைகளோடு போரிடுவீர்கள். 'கேவலம் பெண் பிள்ளைகள்' என்று அலட்சியம் செய்வீர்கள். பெண்களுடன் போர் செய்வது உங்களுக்கு அவமானம். ஆனால் நூறு ஆண் பிள்ளைகளைக் காட்டிலும் ஒரு பெண் பிள்ளை அதிகமான தீங்கு செய்து விடுவாள். பாம்பின் கால் பாம்பு அறியும். அந்தக் குந்தவையின் வஞ்சனையெல்லாம் உங்களுக்குத் தெரியாது; எனக்குத் தெரியும். தங்களையும் என்னையும் சேர்த்து அவள் அவமானப்படுத்தியதைத் தாங்கள் மறந்திருக்கலாம்; நான் மறக்க முடியாது. நூறு பெண்களுக்கு மத்தியில் என்னைப் பார்த்து 'அந்தக் கிழவனுக்குத்தான் சாகப் போகிற சமயத்தில் பெண் மோகம் பிடித்துப் புத்தி கெட்டுப் போய் விட்டது; — உன் அறிவு எங்கேயடி போயிற்று? அந்தக் கிழவனைப் போய் ஏன் மணந்து கொண்டாய்?' என்று கேட்டாளே, அதை நான் மறக்க முடியுமா? 'தேவலோக மோகினியைப் போல் ஜொலிக்கிறாயே? எந்த ராஜகுமாரனும் உன்னை விரும்பி மாலையிட்டுப் பட்டமகிஷியாக வைத்திருப்பானே? போயும் போயும் அந்தக் கிழ எருமை மாட்டைப் போய்க் கலியாணம் செய்து கொண்டாயே?' என்று அவள் என்னைக் கேட்டதை மறக்க முடியுமா? இந்த உடம்பில் உயிருள்ள வரையில் மறக்க முடியாது!'' என்று கூறி நந்தினி விம்மி அழத் தொடங்கினாள். அவளுடைய கண்களில் பொங்கிய கண்ணீர் தாரை தாரையாகக் கன்னங்களின் வழியாகப் பெருகி அவளது மார்பகத்தை நனைத்தது.

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

# உலகம் சுழன்றது!

முதிய பிராயத்தில் தாம் கலியாணம் செய்து கொண்டது பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிக் கொள்ளுகிறார்கள் என்பதைப் பழுவேட்டரையர் அறிந்திருந்தார். அப்படி நிந்தனையாகப் பேசியவர்களில் குந்தவைப் பிராட்டியும் ஒருத்தி என்பது அவரது காதுக்கு எட்டியிருந்தது. ஆனால் குந்தவை என்ன சொன்னாள் என்பதை இதுவரை யாரும் பச்சையாக எடுத்துச் சொல்லவில்லை. இப்பொழுது நந்தினியின் வாயினால் அதைக் கேட்டதும் அவருடைய உள்ளம் கொல்லர் உலைக்களத்தை ஒத்தது. குப், குப் என்று அனல் கலந்த பெருமூச்சு வந்தது நந்தினியின் கண்ணீர் அவருடைய உள்

ளத் தீயை மேலும் கொழுந்து விட்டெரியச் செய்த நெய்யாக உதவிற்று.

"என் கண்ணே! அந்தச் சண்டாளப் பாதகி அப்படியா சொன்னாள்? என்னைக் கிழ எருமை மாடு என்று சொன்னாள்? இருக்கட்டும்; அவளை... அவளை.... என்ன செய்கிறேன், பார்! எருமை மாடு அல்லிக்கொடியைக் காலில் வைத்து நசுக்குவது போல் நசுக்கி எறிகிறேன், பார்! இன்னும்... அவளை... அவளை...." என்று பழுவேட்டரையர் கோபாவேசத்தினால் பேச முடியாமல் தவித்தார். அவர் முகம் அடைந்த கோர சொரூபத்தை வர்ணிக்க முடியாது.

நந்தினி அவரைச் சாந்தப்படுத்த முயன்றாள். அவருடைய இரும்புக் கையைத் தன் பூவையொத்த கரத்தினால் பற்றி விரல்களோடு விரல்களை இணைத்துக் கோத்துக் கொண்டாள்.

"நாதா! எனக்கு நேர்ந்த அவமானத்தைத் தாங்கள் பொறுக்க மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் மத்தகஜத்தின் மண்டையைப் பிளந்து இரத்தத்தைக் குடிக்கும் வலிமையுள்ள சிங்கம் கேவலம் ஒரு பூனையின் மீது பாய முடியாது. குந்தவை ஒரு பெண் பூனை. ஆனால் பெரிய மந்திரக்காரி. மாயமும் மந்திரமும் செய்துதான் எல்லோரையும் அவள் இஷ்டம் போல் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள்! இந்தச் சோழ ராஜ்யத்தையே ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள்! அவளுடைய மந்திரத்தை மாற்று மந்திரத்தால்தான் வெல்ல வேண்டும். தங்களுக்கு விருப்ப மில்லாவிட்டால் சொல்லி விடுங்கள். இன்றைக்கே நான் இந்த மாளிகையை விட்டு வெளியேறுகிறேன்..." என்று கூறி மீண்டும் விம்மினாள்.

பழுவேட்டரையரின் கோப வெறி தணிந்தது; மோக வெறி மிகுந்தது.

"வேண்டாம்; வேண்டாம்! ஆயிரம் மந்திரவாதிகளை வேண்டுமானாலும் அழைத்து வைத்துக் கொள். நீ போக வேண்டாம்! என் உயிர் அனையவள் நீ! 'அனையவள்' என்ன? என் உயிரே நீதான்! உயிர் போய்விட்டால் அப்புறம் இந்த உடம்பு என்ன செய்யும்? ...இப்போதே என்னை நீ விலக்கி வைத்திருப்பது என்னை உயிரோடு வைத்துக் கொல்லுகிறது. இத்தனை மந்திரம் தெரிந்து வைத்திருக்கிறாயே? எனக்கு ஒரு மந்திரம் சொல்லித் தரக் கூடாதா?" என்றார்.

"நாதா! தங்கள் கையில் வாளும் வேலும் இருக்கும்போது மந்திரம் எதற்கு? பேதைப் பெண்ணாகிய என்னிடம் விட்டு விடுங்கள் மாயமந்திரங்களை! தங்களுக்கு எதற்கு மாயமும் மந்திரமும்?" என்றாள் நந்தினி.

"கண்ணே! நீ உன் பவள வாய் திறந்து 'நாதா!' என்று அழைக்கும் போதே என் உடம்பு சிலிர்க்கிறது.. உன் பொன் முகத்தைப் பார்த்தால் என் மதி சுழல்கிறது. என் கையில் வாளும் வேலும் இருப்பது உண்மைதான். அதையெல்லாம் போர்க்களத்தில் பகைவர்களைத் தாக்குவதற்கு உபயோகிப்பேன். ஆனால் அந்த ஆயுதங்களை வைத்துக் கொண்டு இந்தக் கொடி மண்டபத்தில் என்ன செய்வேன்? மன்மதனுடைய பாணங்களுக்கு எதிர் பாணம் என்னிடம் ஒன்றுமில்லையே? உன்னிடம் அல்லவா இருக்கிறது? எனக்கு மந்திரம் எதற்காக என்று கேட்கிறாய்! என் உடலையும் உயிரையும் ஓயாமல் எரித்துக் கொண்டிருக்கிறதே, — அந்தத் தீயைத் தணிப்பதற்காகத்தான்! அதற்கு ஏதாவது மந்திரம் உனக்குத் தெரிந்தால் சொல்! இல்லையென்றால், உன் பூ மேனியைத் தொட்டு மகிழும் பாக்கியத்தை எனக்குக் கொடு! எப்படியாவது என் உயிரைக் காப்பாற்று! கண்மணி! உலகம் அறிய சாஸ்திர விதிப்படி நீயும் நானும் மணந்து இரண்டரை ஆண்டுகள் ஆகின்றன! ஆயினும் நாம் உலக வழக்கப்படி இல்வாழ்க்கை நடத்த ஆரம்பிக்கவில்லை. விரதம் என்றும், நோன்பு என்றும் சொல்லி என்னை ஒதுக்கியே வைத்துக் கொண்டிருக்கிறாய். கரம் பிடித்து மணந்து கொண்ட கணவனை வாட்டி வதைக்கிறாய்! அல்லது ஒரு வழியாக எனக்கு உன் கையினால் விஷத்தைக் கொடுத்துக் கொன்றுவிடு!..."

நந்தினி தன் செவிகளைப் பொத்திக் கொண்டு, "ஐயையோ! இம்மாதிரி கொடிய வார்த்தைகளைச் சொல்லாதீர்கள்! இன்னொரு முறை இப்படிச் சொன்னால், நீங்கள் சொல்லுகிறபடி செய்துவிடுவேன். விஷத்தைக் குடித்துச் செத்துப் போவேன். அப்புறம் தாங்கள் கவலையற்று நிம்மதியாக இருக்கலாம்!" என்றாள்.

"இல்லை, இல்லை; இனி அப்படிச் சொல்லவில்லை. என்னை மன்னித்துவிடு. நீ விஷம் குடித்து இறந்தால் எனக்கு மன நிம்மதி உண்டாகுமா? இப்போது அரைப் பைத்தியமாக இருக்கிறேன். அப்பொழுது முழுப் பைத்தியமாகி விடுவேன்...!"

"நாதா! எதற்காகத் தாங்கள் பைத்தியமாக வேண்டும்? என்றைக்கு நாம் கைப்பிடித்து மணந்து கொண்டோமோ,

அன்றைக்கே நாம் இரண்டு உடம்பும் ஓர் உயிரும் ஆகிவிட்டோம். உயிரும் உயிரும் கலந்து விட்டன; உள்ளமும் உள்ளமும் சேர்ந்து விட்டன; தங்கள் இதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் இங்கு என் இதயத்தில் எதிரொலியை உண்டாக்குகிறது. தங்கள் நெஞ்சில் உதிக்கும் ஒவ்வொரு எண்ணமும் இங்கே என் அகக் கண்ணாடியில் பிரதிபலிக்கிறது. தங்கள் புருவம் நெரிந்தால் என் கண் கலங்குகிறது. தங்கள் மீசை துடித்தால் என் குடல் துடிக்கிறது. இப்படி நாம் உயிர்க்குயிரான பிறகு, கேவலம் இந்த உடலைப் பற்றி ஏன் சிந்தனை? மண்ணினால் ஆன உடம்பு இது; ஒரு நாள் எரிந்து சாம்பராகி மண்ணோடு மண் ஆகப் போகிற உடம்பு இது!....''

''நிறுத்து! நிறுத்து! உன் கொடுமையான வார்த்தைகளைக் கேட்டு என் காது கொப்புளிக்கிறது!'' என்று பழுவேட்டரையர் அலறினார். மேலும் அவள் பேச இடம் கொடாமல் பேசினார்: ''மண்ணினால் ஆன உடம்பு என்று சொன்னாய்? பொய்! பொய்! தேன் மணம் கமழும் உன் கனிவாயினால் அத்தகைய பெரும் பொய்யைச் சொல்லாதே! உன் உடம்பு மண்ணினால் செய்ததாகவா சொன்னாய்? ஒரு நாளும் இல்லை. உலகில் எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் பிரம்ம தேவன் மண்ணினால் செய்திருக்கலாம், கல்லினாலும் செய்திருக்கலாம், கண்ணாம்பினாலும் செய்திருக்கலாம், கரியையும் சாம்பரையும் கலந்தும் செய்திருக்கலாம். ஆனால் உன்னுடைய திருமேனியை பிரம்மா எப்படிச் செய்தான் தெரியுமா? தேவலோகத்து மந்தார மரங்களிலிருந்து உதிர்ந்த மலர்களைச் சேகரித்தான்; தமிழகத்துக்கு வந்து செந்தாமரை மலர்களைப் பறித்துச் சேகரித்தான்; சேகரித்த மலர்களை தேவலோகத்தில் தேவாமிர்தம் வைத்திருக்கும் தங்கக் கலசத்தில் போட்டான். அமுதமும் மலர்களும் ஊறிக் கலந்து ஒரே குழம்பான பிறகு எடுத்தான். அந்தக் குழம்பில் வெண்ணிலாக் கிரணங்களை ஊட்டினான். பண்டைத் தமிழகத்துப் பாணர்களை அழைத்து வந்து யாழ் வாசிக்கச் சொன்னான். அந்த யாழின் இசையையும் கலந்தான். அப்படி ஏற்பட்ட அற்புதமான கலவையினால் உன் திருமேனியைப் படைத்தான் பிரம்ம தேவன்.....''

''நாதா! ஏதோ பிரம்மாவுக்குப் பக்கத்தில் இருந்து பார்த்தவரைப் போல் பேசுகிறீர்களே! இந்த வர்ணனைகளுக்கெல்லாம் நான் ஒருத்திதானா அகப்பட்டேன்? தங்களுடைய அந்தப்புரத்தில் எவ்வளவோ பெண்ணரசிகள் இருக்கிறார்கள் ராஜ குலங்களில் பிறந்தவர்கள். எத்தனையோ நீண்ட காலமாக அவர்களுடன் இல்லறம் நடத்தியிருக்கிறீர்கள். என்னைத் தாங்கள் பார்த்து இரண்டரை ஆண்டுகள்தான் ஆகிறது!'' என்று நந்தினி சொல்வதற்குள், பழுவேட்டரையர் குறுக்கிட்டார். அவருடைய உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த உணர்ச்சி வெள்ளத்தை வார்த்தைகளின் மூலமாவது வெளிப்படுத்திவிட விரும்பினார் போலும். அவரைப் பற்றி எரித்த தாபத் தீயைச் சொல் மாரியினால் நனைத்து அணைக்க முயன்றார் போலும்.

''நந்தினி! என் அந்தப்புரத்து மாதர்களைப் பற்றிச் சொன்னாய். பழமையான பழுவூர் மன்னர் குலம் நீடித்து வளர வேண்டும் என்பதற்காகவே அவர்களை நான் மணந்தேன். அவர்களில் சிலர் மலடிகளாகித் தொலைந்தார்கள். வேறு சிலர் பெண்களையே பெற்றளித்தார்கள். 'கடவுள் அருள் அவ்வளவுதான்' என்று மன நிம்மதி அடைந்தேன். பெண்களின் நினைவையே வெகு காலம் விட்டொழித்திருந்தேன். இராஜாங்கக் காரியங்களே என் கவனம் முழுவதையும் கவர்ந்திருந்தன. சோழ ராஜ்யத்தின் மேன்மையைத் தவிர வேறு எந்த நினைவுக்கும் இந்த நெஞ்சில் இடமிருக்கவில்லை. இப்படி இருக்கும் போதுதான் பாண்டியர்களோடு இறுதிப் பெரும் யுத்தம் வந்தது. வாலிபப் பிராயத்துத் தளபதிகள் பலர் இருந்த போதிலும் என்னால் பின் தங்கி இருக்க முடியவில்லை. நான் போர்க்களம் சென்றிராவிட்டால் அத்தகைய மாபெரும் வெற்றி கிடைத்தும் இராது. பாண்டியர் படையை அடியோடு நாசம் செய்து மதுரையில் வெற்றிக் கொடி நாட்டிய பிறகு கொங்கு நாடு சென்றேன். அங்கிருந்து அகண்ட காவேரிக் கரையோடு திரும்பி வந்து கொண்டிருந்தேன். வழியில் காடு அடர்ந்த ஓர் இடத்தில் உன்னைக் கண்டேன். முதலில் நீ அங்கு நிற்கிறாய் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. கண்ணை மூடி மூடித் திறந்து பார்த்தேன். அப்போதும் நீ நின்றாய். 'நீ வன தேவதையாக இருக்க வேண்டும்; அருகில் சென்றதும் மறைந்துவிடுவாய்!' என்று எண்ணிக் கொண்டு நெருங்கினேன். அப்போதும் நீ மறைந்துவிடவில்லை. புராணக் கதைகளில் சொல்லியிருப்பது போல் சொர்க்க லோகத்திலிருந்து சாபம் பெற்றுப் பூமிக்கு வந்த தேவ கன்னிகை அல்லது கந்தர்வப் பெண்ணா

யிருக்க வேண்டும்; மனித பாஷை உனக்குத் தெரிந்திராது!' என்று எண்ணிக்கொண்டு, 'பெண்ணே! நீ யார்?' என்று கேட்டேன். நீ நல்ல தமிழில் மறுமொழி கூறினாய். 'நான் அநாதைப் பெண்; உங்களிடம் அடைக்கலம் புகுந்தேன்; என்னைக் காப்பாற்றுங்கள்' என்றாய். உன்னைப் பல்லக்கில் ஏற்றி அழைத்துக் கொண்டு வந்தபோது என் மனம் எண்ணாததெல்லாம் எண்ணியது. உன்னை எங்கேயோ, எப்போதோ, முன்னம் பார்த்திருப்பது போலத் தோன்றியது. ஆனால் நினைத்து நினைத்துப் பார்த்தும் எங்கே என்று தெரியவில்லை. சட்டென்று என் மனத்தை மூடியிருந்த மாயைத் திரை விலகியது; உண்மை உதயமாயிற்று. உன்னை இந்த ஜன்மத்தில் நான் முன்னால் பார்த்ததில்லை, ஆனால் முந்தைய பல பிறவிகளில் பார்த்திருக்கிறேன் என்பது தெரிந்தது. அந்தப் பூர்வ ஜன்மத்து நினைவுகள் எல்லாம் மோதிக் கொண்டு வந்தன. நீ அகலிகையாக இந்த உலகில் பிறந்திருந்தாய்; அப்போது நான் தேவேந்திரனாக இருந்தேன். சொர்க்க லோக ஆட்சியைத் துறந்து ரிஷி சாபத்துக்கும் துணிந்து உன்னைத் தேடிக் கொண்டு வந்தேன். பிறகு நான் சந்தனு மகாராஜனாகப் பிறந்திருந்தேன். கங்கைக் கரையோடு வேட்டையாடச் செல்கையில் உன்னைக் கண்டேன்; பூலோகப் பெண்ணைப் போல் உருக் கொண்டிருந்த கங்கையாகிய உன்னைக் காதலித்தேன். பிறகு ஒரு காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் நான் கோவலனாய்ப் பிறந்திருந்தேன்; நீ கண்ணகியாக அவதரித்திருந்தாய். என் அறிவை மறைத்த மாயையினால் உன்னைச் சில காலம் மறந்திருந்தேன். பிறகு மாயைத் திரை விலகிற்று. உன் அருமையை அறிந்தேன். மதுரை நகருக்கு அழைத்துச் சென்றேன். வழியில் உன்னை ஆயர்குடியில் விட்டு விட்டுச் சிலம்பு விற்கச் சென்றேன். வஞ்சத்தினால் உயிரை இழந்தேன். அதற்குப் பழிக்குப் பழியாக இந்தப் பிறவியில் மதுரைப் பாண்டியன் குலத்தை நாசம் செய்து விட்டுத் திரும்பி வரும்போது உன்னைக் கண்டேன். பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு பிரிந்த கண்மணி நீதான் என்பதை உணர்ந்தேன்!....''

இப்படிப் பழுவேட்டரையர் முற்பிறவிக் கதைகளைச் சொல்லிக் கொண்டு வந்தபோது நந்தினி அவர் முகத்தைப் பார்க்காமல் வேறு திசையை நோக்கிக் கொண்டிருந்தாள். அதனால் அவள் முகத்தில் அப்போது தோன்றிய பாவ வேறுபாடுகளைப் பழுவேட்டரையர் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால், அவர் தொடர்ந்து பேசியிருப்பாரா என்பது சந்தேகம்தான்.

மூச்சு விடுவதற்காக அவர் சற்று நிறுத்தியபோது, நந்தினி அவரைத் திரும்பிப் பார்த்து, ''நாதா! தாங்கள் கூறிய உதாரணங்கள் அவ்வளவு பொருத்தமாயில்லை. எல்லாம் கொஞ்சம் அபசகுனமாகவே இருக்கின்றன. வேண்டுமென்றால், தங்களை மன்மதன் என்றும், என்னை ரதி என்றும் சொல்



னுங்கள்!'' என்று முன்போல் முகம் மலர்ந்து புன்னகை செய்தாள்.

பழுவேட்டரையரின் முகம் அப்போது மகிழ்ச்சியினாலும் பெருமையினாலும் மலர்ந்து விளங்கியது. எவ்வளவு அவலட்சணமான மனிதனாயினும், தான் காதலித்த பெண்ணினால் 'மன்மதன்' என்று அழைக்கப்பட்டால் குதூகலப்படாவதன் யார்? என்றாலும், தற்பெருமையை விரும்பாதவர் போல் பேசினார்.

''கண்மணி! உன்னை ரதி என்பது மிகவும் பொருத்தமானதுதான். ஆனால் என்னை 'மன்மதன்' என்று சொல்வது பொருந்துமா! உன் அன்பு மிகுதியினால் சொல்கிறாய்!'' என்றார்.

''நாதா! என் கண்களுக்குத் தாங்கள்தான் மன்மதன். ஆண் பிள்ளைகளுக்கு அழகு வீரம். தங்களைப் போன்ற வீராதி வீரர் இந்தத் தென் நாட்டில் யாரும் இல்லை என்பதை உலகமே சொல்லும். அடுத்தபடியாக ஆண்மை படைத்தவர்களுக்கு அழகு தருவது அபலைகளிடம் இரக்கம். அந்த இரக்கம் தங்களிடம் இருப்பதற்கு நானே அத்தாட்சி. இன்ன ஊர், இன்ன குலம் என்று தெரியாத இந்த ஏழை அநாதைப் பெண்ணைத் தாங்கள் அழைத்து வந்து அடைக்கலம் அளித்தீர்கள். இணையில்லாத அன்பையும் ஆதரவையும் என்பேரில் சொரிந்தீர்கள். அப்படிப்பட்ட தங்களை நான் வெகு காலம் காத்திருக்கும்படி செய்ய மாட்டேன். என்னுடைய விரதமும் நோன்பும் முடியும் காலம் நெருங்கிவிட்டது'' என்றாள்.

''கண்மணி! என்ன விரதம், என்ன நோன்பு என்பதை மட்டும் தெளிவாகச் சொல்லிவிடு! எவ்வளவு சீக்கிரம் முடித்துத் தரலாமோ அவ்வளவு சீக்கிரத்தில்



முடித்துத் தருவேன்!'' என்றார் பழுவூர் அரசர்.

''தன்னைக் காட்டிலும் மன்மதன் வேறு இல்லை என்று எண்ணியிருக்கும் இந்த சுந்தர சோழருடைய சந்ததிகள் தஞ்சை சிம்மாதனத்தில் ஏறக் கூடாது. தற்பெருமை கொண்ட அந்தக் குந்தவையின் கர்வத்தை ஒடுக்க வேண்டும்.....''

''நந்தினி! அந்த இரண்டு காரியங்களும் நிறைவேறி விட்டதாகவே நீ வைத்துக் கொள்ளலாம். ஆதித்தனுக்கும் அருள்மொழி வர்மனுக்கும் பட்டம் கிடையாது. மதுராந்தகனுக்கே பட்டம் கட்ட வேண்டும் என்று இந்த ராஜ்யத்தின் தலைவர்கள் எல்லோரும் சம்மதித்து விட்டார்கள்....''

''**எல்லாரும்** சம்மதித்து விட்டார்களா? உண்மைதானா?'' என்று நந்தினி அழுத்தமாகக் கேட்டாள்.

''இரண்டு மூன்று பேரைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் சம்மதித்து விட்டார்கள். கொடும்பாளூரானும், மலையமானும், பார்த்திபேந்திரனும் நம்முடன் என்றும் இணங்க மாட்டார்கள். அவர்களைப் பற்றிக் கவலையில்லை...''

''ஆயினும் காரியம் முடியும்வரையில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது தானே?''

''அதற்குச் சந்தேகம் இல்லை. எல்லா ஜாக்கிரதையும் நான் செய்துகொண்டு தான் வருகிறேன். மற்றவர்களின் மூடடாள்தனத்தினால் பிசகு நேர்ந்தால் தான் நேர்ந்தது. இன்றைக்குக் கூட அத்தகைய பிசகு ஒன்று நேர்ந்திருக்கிறது. காஞ்சியிலிருந்து வந்த ஒரு வாலிபன் காலாந்தகனை ஏமாற்றிவிட்டுச் சக்கரவர்த்தியைச் சந்தித்து ஓலை கொடுத்திருக்கிறான்...''

''ஆகா! தங்கள் தம்பியைப் பற்றித் தாங்கள் ஓயாமல் புகழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அவருக்குச் சாமர்த்தியம் போதாது என்று நான் சொல்லவில்லையா?''

''இந்த விஷயத்தில் அசட்டுத்தனமாகத்தான் போய்விட்டான். ஏதோ நம் அரண்மனை முத்திரை மோதிரத்தை அந்த வாலிபன் காட்டியதாகச் சொல்கிறான்!....''

''ஏமாந்து போனவர்கள் இப்படித் தான் ஏதாவது காரணம் சொல்வார்கள்! ஏமாற்றிய அந்த வாலிபனைப் பிடிக்க முயற்சி ஏதும் செய்யவில்லையா?....''

''முயற்சி செய்யாமல் என்ன? கோட்டைக்கு உள்ளேயும் வெளியிலேயும் வேட்டை ஆரம்பமாகி விட்டது. எப்படியும் பிடித்து விடுவார்கள். இதனாலெல்லாம் நம்முடைய காரியத்துக்கு ஒன்றும் பங்கம் வந்து விடாது. சக்கரவர்த்தி காலமானதும் மதுராந்தகன் சிம்மாதனம் ஏறுவது நிச்சயம்.''

''நாதா! என்னுடைய விரதம் என்னவென்பதைத் தங்களுக்குத் தெரியப்படுத்தும் காலம் இப்போது நெருங்கி வந்துவிட்டது...''

''கண்ணே! அதைச் சொல்லும்படி தான் நானும் கேட்கிறேன்...''

''மதுராந்தகன் — அந்த அசட்டுப் பிள்ளை — பெண் என்றால் பல்லை இளிப்பவன் — அவன் பட்டத்துக்கு வருவதினால் என்னுடைய விரதம் நிறைவேறிவிடாது....''

''வேறு எதனால் நிறைவேறும்? உன் விருப்பத்தைச் சொல்லு. நிறைவேற்றி வைக்க நான் இருக்கிறேன்...''

''அரசே! என் சிறு பிராயத்தில் ஒரு பிரபல ஜோசியன் என் ஜாதகத்தைப் பார்த்தான். பதினெட்டுப் பிராயம் வரையில் நான் பற்பல இன்னல்களுக்குள்ளாவேன் என்று சொன்னான்...''

''இன்னும் என்ன சொன்னான்?''

''பதினெட்டுப் பிராயத்துக்குப் பிறகு தசை மாறும் என்றான். இணையில்லாத உன்னதப் பதவியை அடைவேன் என்று சொன்னான்...''

''அவன் சொன்னது உண்மைதான்! அந்த ஜோசியன் யார் என்று சொல்லு! அவனுக்குக் கனகாபிஷேகம் செய்து வைக்கிறேன்.''

''நாதா!''

''கண்ணே!''

''இன்னும் அந்த ஜோசியன் கூறியது ஒன்று இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?''

''கட்டாயம் சொல்லு! சொல்லியே தீரவேண்டும்!''

''என்னைக் கைப்பிடித்து மணந்து கொள்ளும் கணவர் மணி மகுடம் தரித்து ஒரு மகா சாம்ராஜ்யத்தின் சிம்மாதனத்தில் ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் வந்து அடிபணிந்து ஏத்தும் சக்கரவர்த்தியாக வீற்றிருப்பார் என்று அந்த ஜோசியன் சொன்னான். அதை நிறைவேற்றுவீர்களா?''

பழுவேட்டரையரின் செவியில் இவ்வார்த்தைகள் விழுந்ததும், அவருக்கு முன்னாலிருந்த நந்தினி சுழன்றாள்; அவள் வீற்றிருந்த மஞ்சமும் சுழன்றது. லதா மண்டபம் சுழன்றது. அந்த மண்டபத்தின் தூண்கள் சுழன்றன. எதிரே இருந்த இருளடர்ந்த தோப்புச் சுழன்றது. நிலாக் கதிரில் ஒளிர்ந்த மர உச்சிகள் சுழன்றன. வானத்து நட்சத்திரங்கள் சுழன்றன. இரு புறத்து மாளிகைகளும் சுழன்றன. உலகமே சுழன்றது!

**(தொடரும்)**

# மகாபாரதம்

## ராஜாஜி

தேர் ஏறிய பீமன் பகைவர் படைக்குள் மறைந்ததைப் பார்த்த திருஷ்டத்யும்னன் விரைவாக அவனைப் பின் தொடர்ந்து சென்றான். அவனுடைய தேரைக் கண்டுபிடித்துப் பார்க்கையில் சாரதி மட்டும் இருந்து கொண்டு பீமன் இல்லாததைக் கண்டான். திகைத்துப் போய்க் கண்ணில் நீர் ததும்ப சாரதியைப் பார்த்து.

''விசோகா! எனக்கு உயிரைக் காட்டிலும் பிரியமான பீமன் எங்கே?'' என்று கேட்டான்.

துருபத குமாரனை வணங்கி விசோகன் ''பாண்டு புத்திரன் என்னை இங்கே இருக்கச் சொல்லிவிட்டு திருதராஷ்டிர புத்திரர்கள் தேர்களில் ஒன்றுகூடி நின்ற சேனா சமுத்திரத்துக்குள் கதை எடுத்துக்கொண்டு பாதசாரியாக நுழைந்து மறைந்தான்!'' என்றான்.

இதைக் கேட்டதும் பீமசேனனை அனைவரும் சேர்ந்து கொன்றே விடுவார்கள் என்று எண்ணி மிகவும் கவலைப்பட்ட திருஷ்டத்யும்னனும் பகைவர் சேனைக்குள் புகுந்தான். பீமனுடைய கதாயுதத்துக்கு இரையாகி அடிபட்டுக் கிடந்த யானைகளைக் கொண்டே யுத்த களத்தில் வழி பார்த்துக் கொண்டு சென்றான்.

பகைவர்களுக்கிடையில் பீமனைக் கண்டான். நான்கு பக்கங்களிலும் ரதம் ஏறி எதிர்க்கும் பகைவர்களால் சூழப்பட்டுக் கோபாக்னி கக்கிக்கொண்டு கையில் கதாயுதம் பிடித்தவனாகப் பீமன் நின்றான். திருஷ்டத்யும்னன் அவனைத் தழுவித் தன் தேரில் ஏற்றிக் கொண்டு அவன் உடலில் பதிந்திருந்த அம்புகளையெல்லாம் எடுத்தான்.

அப்போது துரியோதனன் கட்டளையின்பேரில் பல வீரர்கள் ஒன்று சேர்ந்து துருபதன் மகனையும் பீமனையும் தாக்கினார்கள். ''இவர்களைக் கொல்லுங்கள்; அவர்கள் யுத்தம் கோராமலிருந்தாலும் அவர்களைத் தாக்குங்கள்'' என்று துரியோதனன் கட்டளையிட்டான். அவ்வாறே யுத்தத்துக்கு அழைக்காத பீமனையும் திருஷ்டத்யும்னனையும் அவர்கள் தாக்கினார்கள்.

அப்போது திருஷ்டத்யும்னன் துரோணரிடம் கற்ற ஒரு ரகசிய அஸ்திரத்தை விட்டு எதிரிகளைப் பிரக்ஞை இழக்கச் செய்தான். அச்சமயம் துரியோதனன் வந்து மோகனாஸ்திரத்துக்கு மாற்றான வேறொரு அஸ்திரம் பிரயோகம் செய்து கௌரவ வீரர்களைப் பிரக்ஞை பெறச் செய்து உற்சாகப்படுத்தி திருஷ்டத்யும்னனைத் தாக்கினான்.

இதற்குள் யுதிஷ்டிரர் அபிமன்யுவின் தலைமையில் பன்னிரண்டு ரத வீரர்களுடன் படையை அமைத்து பீமனும் திருஷ்டத்யும்னனும் இருந்த இடத்துக்கு அனுப்பினார். சுபத்திரையின் வீரகுமாரன் படையுடன் வந்ததைப் பார்த்து திருஷ்டத்யும்னன் மிகுந்த சந்தோஷமடைந்து போரை நடத்தினான். பீமனும் அதற்குள் தண்ணீர் குடித்து இளைப்பாறிக் கேகய ராஜனுடைய தேரில் ஏறி யுத்தத்தில் கலந்து கொண்டான். ஆனால் துரோணருடைய பராக்கிரமம் அன்று வெகு உக்கிரமாக இருந்தது. திருஷ்டத்யும்னனுடைய சாரதியையும், குதிரைகளை



யும் கொன்று அவனுடைய தேரையும் உடைத்து விட்டார். தேரிழந்த துருபத குமாரன் உடனே அபிமன்யுவின் தேரில் ஏறி யுத்தத்தை நடத்தினான். பாண்டவர்களுடைய சேனை நிலை இழந்து நடுக்கமுற்றது. துரோணரைக் கௌரவ வீரர்கள் மிகவும் பாராட்டினார்கள்.

அதன் மேல் கோரமான சங்குல யுத்தம் நடந்தது. ஆயிரக்கணக்கான வீரர்களும் படையாட்களும் மாண்டார்கள். துரியோதனன் பீமனை நேரே சந்தித்தான். இருவருக்குமுள்ள பகைமையை முதலில் பேச்சில் வெளிப்படுத்திய பிறகு போர் தொடங்கிற்று. தேர்களில் நின்று இருவரும் ஒருவரையொருவர் பலமாகத் தாக்கினார்கள். துரியோதனன் பலமாக அடிபட்டு மூர்ச்சை அடைந்து விட்டான். அதன் பேரில் கிருபர் அவனைச் சாமர்த்தியமாகத் தம் தேரில் ஏற்றிக் கொண்டு காப்பாற்றினார். பீஷ்மரும் அச்சமயம் வந்து விட்டார். அவ்விடத்தில் நடந்த யுத்தத்தைத் தாமே நடத்திப் பாண்டவப் படைகளைத் துரத்தியடித்தார். சூரியன் சிவந்து அஸ்தமிக்கும் சமயமாக விருந்தும் ஒரு முகூர்த்தம் மகா பயங்கரமான போர் நடந்து ஆயிரக்கணக்கான வீரர்கள் மாண்டார்கள். அதன் பிறகு போர் நிறுத்தப்பட்டது. திருஷ்டத்யும்னனும் பீமனும் உயிருடன் திரும்பியது தரும புத்திரனுக்கு அளவற்ற சந்தோஷம் தந்தது.

## 71. ஏழாவது நாள் யுத்தம்

உடல் முழுவதும் அம்புகள் தைத்துத் துன்பப்பட்டவனான துரியோதனன் பீஷ்மரிடம் சென்று, ''ஒவ்வொரு தினமும் பாண்டவர்கள் வெற்றி பெற்று நம்முடைய சேனையின் வியூகத்தைப் பிளந்தும் சூரர்களைக் கொன்றும் வருகிறார்களே, நீர் சும்மா இருக்கிறீரே!'' என்றான்.

பீஷ்மர் துரியோதனனுக்கு ஆறுதல் மொழிகள் சொன்னார்:



''நானும் துரோணரும் சல்லியனும் கிருதவர்மாவும் அசுவத்தாமாவும் விகர்ணனும் பகதத்தனும் சகுனியும் அவந்தி தேசத்து இரு சகோதரர்களும் திரிகர்த்த ராஜனும் மகத தேசாதிபதியும் கிருபாச்சாரியாரும் உனக்காக உயிரையும்விடத் தயாராக இருக்கும் போது நீ ஏன் மனத் தாழ்ச்சி அடைகிறாய்? வேண்டாம்'' என்று சொல்லிச் சேனையை அன்றைய யுத்தத்துக்கு அணிவகுத்தார்.

''இதோ பார். ஆயிரக்கணக்கான ரதங்களும், குதிரைகளும், குதிரை வீரர்களும், சிறந்த யானைகளும், அநேக தேசங்களிலிருந்து வந்து ஆயுதம் எடுத்து நிற்கும் காலாட்படைகளும் கொண்ட இந்தச் சேனையை வைத்துக் கொண்டு தேவர்களையும் ஜெயிக்க முடியும்; பயப்பட வேண்டாம்!'' என்று சொல்லித் துரியோதனனுக்குக் காயங்களை நீக்கும் சிறந்த ஔஷதத்தையும் தந்தார்.

அவன் அதைத் தன் தேகத்தில் பூசிக் கொண்டு அம்பு பொத்திய காயங்களை யெல்லாம் நீக்கிக்கொண்டு தைரியமாகவும் உற்சாகமாகவும் யுத்தத்துக்குச் சென்றான். அன்று கௌரவப் படை மண்டல வியூகமாக அணிவகுக்கப்பட்டது. ஒவ்வொரு யானைக்குப் பக்கத்தில் ஏழு தேர்களும், ஒவ்வொரு தேருக்குத் துணையாக ஏழு குதிரை வீரர்களும், ஒவ்வொரு குதிரை வீரனுக்குத் துணையாகப் பத்து வில்லாளர்களும், வில்லாளி ஒவ்வொருவனுக்கும் பத்துக் கேடயக்காரர்கள் காப்பாகவும் நின்றார்கள். எல்லா வீரர்களும் நல்ல கவசம் பூண்டிருந்தார்கள். இந்தப் பெருஞ்சேனையின் மத்தியில் தேரின் மேல் நின்ற துரியோதனன் இந்திரன் போல் விளங்கினான்.

யுதிஷ்டிரர் பாண்டவ சேனையை ''வச்சிர'' வியூகமாக அணிவகுத்தார். அன்று நடந்த யுத்தத்தில் அநேக முனைகளில் பெரும் போர் நடைபெற்றது. அருச்சுனனுடைய தாக்குதலை பீஷ்மரே எதிர்த்தார். மற்றொரு முனையில் துரோணரும் விராடனும் ஒருவரையொருவர் எதிர்த்துப் போர் நடந்தது. வேறொரு முனையில் சிகண்டிக்கும் அசுவத்தாமனுக்கும் பெரும் யுத்தம் நிகழ்ந்தது. மற்றோர் இடத்தில் துரியோதனனும் திருஷ்டத்யும்னனும் கை கலந்தார்கள். நகுல சகாதேவர்களும் தங்கள் மாமனை சல்லியனைத் தாக்கினார்கள். அவந்தி தேச ராஜாக்கள் யுதாமன்யுவை எதிர்த்தார்கள். பீமசேனன் கிருதவர்மா, சித்திரசேனன், விகர்ணன், துர்மர்ஷன் இவர்களனைவரையும் எதிர்த்தான். கடோத்கஜனுக்கும் பகதத்தனுக்கும் பெரும் போர் மற்றொரு முனையில் நிகழ்ந்தது. வேறோர் இடத்தில் அலம்பசன் சாத்யகியை எதிர்த்தான். பூரிசிரவசு திருஷ்டகேதுவை எதிர்த்தான். யுதிஷ்டிரன் சுருதாயுவை எதிர்த்தான். சேகிதானன் கிருபரை மற்றொரு முனையில் எதிர்த்தான்.

துரோணருக்கும் விராடனுக்கும் நடந்த யுத்தத்தில் விராடன் தோற்றுத் தன் தேரையும் சாரதியையும் குதிரையையும் இழந்து தன் புத்திரன் சங்கனுடைய ரதத்தில் ஏறினான். விராடனுடைய புத்திரர்கள் உத்திரனும் சுவேதனும் முதல் நாள் யுத்தத்திலேயே மாண்டார்கள். ஏழாவது நாளில் சங்கனும் தகப்பனார் அருகில் உயிர் நீத்தான்.

துருபதன் மகனான சிகண்டி அசுவத்தாமனால் தாக்கப்பட்டுத் தேரை இழந்தான். அதன் மேல் அவன் கீழே குதித்து வாளும் கேடயமும் கையில் எடுத்துக் கொண்டு போர் புரியப் பார்த்தான். அசுவத்தாமன் சிகண்டியினுடைய கத்தியைப் பாணத்தினால் உடைத்தான். உடனே சிகண்டி துண்டிக்கப்பட்ட கத்தியைச் சுழற்றி அசுவத்தாமன் பேரில் வீசினான். உக்கிரவேகமாக வந்த அந்தக் கத்தியை அசுவத்தாமன் ஒரு பாணத்தை விட்டு வெகு சாமர்த்தியமாகத் தடுத்தான். மிகவும் அடிபட்ட சிகண்டி சாத்யகியின் தேரில் ஏறி விலகினான்.

சாத்யகிக்கும் ராக்ஷதனான அலம்பசனுக்கும் நடந்த யுத்தத்தில் முதலில் சாத்யகி பலமாக அடிக்கப்பட்டான். ஆனால் முடிவில் அலம்பசன் தோற்றுப் புறங்காட்டி ஓடினான்.

திருஷ்டத்யும்னனால் தாக்கப்பட்ட துரியோதனன் தேர்க் குதிரைகளை இழந்தான். கத்தி எடுத்துக் கொண்டு கீழே குதித்துத் துரியோதனன் திருஷ்டத்யும்னனை எதிர்த்துச் சென்றான். அச்சமயம் சகுனி வந்து அரசனைத் தன் ரதத்தில் ஏற்றிக் கொண்டு போய் விட்டான். கிருதவர்மன் பீமனைப் பலமாகத் தாக்கினான். ஆனால் தோல்வியுற்றான். உடல் நிறைய அம்புகள் பாய்ந்து கிருதவர்மன் முள்ளம் பன்றி போல் விளங்கியவனாய்க் குதிரைகளையும் தேரையும் இழந்து தோல்வியை ஒப்புக் கொண்டு சகுனியின் தேரை நோக்கி ஓடினான்.

அவந்தி தேசத்துச் சகோதரர்களான விந்தனும் அனுவிந்தனும்

யுதாமன்யுவை எதிர்த்துத் தோல்வியடைந்தார்கள். அவர்களுடைய படையும் நாசம் செய்யப்பட்டது. பகதத்தன் யானை ஏறிக் கடோத்கஜனை எதிர்த்துப் பெரிய வெற்றி அடைந்தான். கூட இருந்த வீரர்களும் படையாட்களும் புறங்காட்டி ஓடிவிட்டார்கள். கடோத்கஜன் ஒருவன் மட்டும் நின்று பகதத்தனை எதிர்த்தான். கடும் போர் நடந்தது. முடிவில் கடோத்கஜன் பெருந் தோல்வியுற்றுக் களத்தினின்று தப்பி ஓடினன். கௌரவ சேனை மகிழ்ச்சி அடைந்தது.

சல்லியனுக்கும் அவன் சகோதரியின் மக்கள் நகுல சகாதேவர்களுக்கும் நடந்த சண்டையில் நகுலனுடைய குதிரைகள் கொல்லப்பட்டன. உடனே நகுலன் சகாதேவனுடைய ரதத்தில் ஏறி இருவரும் ஒரு தேரிலிருந்து யுத்தம் புரிந்தார்கள். சகாதேவன் விடுத்த அம்பு சல்லியனைத் தாக்கி மூர்ச்சையடையச் செய்தது. அதன் மேல் சாரதியானவன் சல்லியனுடைய ரதத்தை மெள்ள வேறிடம் கொண்டு போய்விட்டான். இவ்வாறு மத்திர தேசத்து ராஜன் புறங்காட்டி விலகியதைப் பார்த்துத் துரியோதனனுடைய சேனை தைரியத்தை இழந்தது. மாத்திரீ புத்திரர்கள் சங்கங்களை ஊதிக் கொண்டு சல்லியனுடைய சேனையை நாசம் செய்தார்கள்.

மத்தியானத்தில் யுதிஷ்டிரன் சுருதாயுவை நோக்கித் தேரைச் செலுத்தினன். தருமபுத்திரன் தொடுத்த அம்புகளைச் சுருதாயுவானவன் சேதித்து ஏழு கூரிய அம்புகளை எய்து தருமபுத்திரருடைய கவசத்தை உடைத்து அவனைக் காயப்படுத்தினன். தருமபுத்திரன் சுருதாயுவின் மார்பில் நன்ருகத் தைக்கும்படி ஒரு பாணத்தைச் செலுத்தினன்.

அன்று தரும புத்திரன் தன் இயற்கை மன நிலைமை இழந்து கோபங்கொண்டு ஜொலித்தான் என்கிருர் வியாசர். முடிவில், தேரும் குதிரைகளும், சாரதியும் வீழ்த்தப்பட்டுச் சுருதாயு யுத்த களத்தை விட்டு ஓடினன். இது நிகழ்ந்ததும் துரியோதனனுடைய சைனியம் முற்றிலும் தைரியம் இழந்து கலக்கமடைந்து விட்டது.

கிருபரை எதிர்த்துச் சேகிதானன் சாரதியையும் தேரையும் இழந்தான். அதன்பின் அவன் கதாயுதத்தை எடுத்துக் கொண்டு கீழே இறங்கிக் கிருபருடைய குதிரைகளையும் சாரதியையும் கொன்றுன். கிருபரும் தேரை விட்டு இறங்கித் தரையில் நின்று வில்லை வளைத்து அம்புகள் எய்தார். அவை சேகிதானனை மிகவும் துன்புறுத்தின. அதன் மேல் அவன் கதாயுதத்தை வீசிக் கிருபர் மேல் எறிந்தான். அதையும் அவர் தம் பாணத்தால் தடுத்து விட்டார். பிறகு சேகிதானன் கத்தி வீசிக் கொண்டு அவர் மேல் பாய்ந்தான். அவரும் வில்லை எறிந்து விட்டுக் கத்தியைக் கொண்டு நின்றுர். இருவரும் கத்திச் சண்டையில் காயம்பட்டுப் பூமியில் விழுந்தார்கள். பீமசேனன் வந்து சேகிதானனைத் தன் தேரில் ஏற்றிச் சென்றுன். அவ்வாறே சகுனியும் கிருபரைத் தன் தேரில் ஏற்றிச் சென்றுன்.

திருஷ்டகேது பூரிசிரவசின் மேல் தொண்ணூற்றுறு பாணங்களை விட்டு அவன் மார்பில் பாயச் செய்தான். கிரணங்களோடு ஜொலிக்கும் ஆதித்தனைப் போல் பூரிசிரவசு தன் மார்பில் தைத்த பாணங்களுடன் பிரகாசித்தான். அப்போதும் போரை நடத்தித் திருஷ்டகேதுவைப் புறங்காட்டி ஓடச் செய்தான். துரியோதனனுடைய தம்பிகள் மூவர் அபிமன்யுவைத் தாக்கிப் பெருந் தோல்வியடைந்தார்கள். அபிமன்யு, "இவர்களைக் கொல்லப் பீமன் சபதம் எடுத்திருக்கிருனையால் இவர்களை நான் விட்டு விடவேண்டும்" என்று எண்ணி விலகினன். அதன் மேல் பீஷ்மர் அபிமன்யுவைத் தாக்க வந்தார். அதைக் கண்ட அருச்சுனன், "கிருஷ்ணு! பீஷ்மரைத் தாக்கவேண்டும். ரதத்தைச் செலுத்து" என்றுன். அச்சமயம் மற்ற பாண்டவர்களும் அருச்சுனனை வந்து அடைந்தார்கள். இவரையும் பிதாமகர் தடுத்தார். யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் சூரியன் மறைந்தான். போர் நிறுத்தப்பட்டது. எல்லோரும் மிகக் களைப்படைந்தவர்களாகவும் காயங்கள் பட்டுத் துன்பப்பட்டவர்களாகவும் பாசறைகள் போய்ச் சேர்ந்தார்கள்.

இருதரத்து வீரர்களும் உடலில் தைத்திருந்த அம்புகளைப் பிடுங்கி வைத்தியக்கிரமப்படி காயங்களைக்கழுவி இளைப்பாறினர்கள். ஒரு முகூர்த்த காலம் எல்லோரும் சங்கீத வாத்தியங்களைக் கேட்டுக் கொண்டு உல்லாசமாகப் பொழுது போக்கினர்கள். அந்த ஒரு முகூர்த்த காலம் சுவர்க்கத்திலிருப்பது போல் யுத்த விஷயமான வார்த்தை ஒன்றும் பேசாமல் கழிக்கப்பட்டது. அந்தக் காட்சி பார்ப்பதற்கு ரமணீயமாக இருந்தது என்கிருர் வியாசபகவான். மகாபாரதத்தின் உபதேச தத்துவம் இன்னதென்று இதனின்று உணரலாம். (தொடரும்)

சுற்றிலும் கடல்; நடுவில் பல குன்றுகள் போன்று அமைந்துள்ள ஒரே தீவு. அதில் அங்குமிங்குமாக மேலை நாட்டுப் பாணியில் செடிகொடிகளாலான வேலிகளுடன் மர வீடுகள்; வீடுகளோரம் உள்ள தென்னை, மா, பலா, கமுகு, முந்திரி போன்ற பலவகை மரங்கள், பூச்செடிகள்; இரவு நேரங்களில் கைலாயமோ என எண்ணும்படியாய் ஒளிரும் மின்விளக்குகள்; ஜிலு ஜிலு காற்று; பகலானாலும் இரவானாலும் மேடான இடத்தில் எங்கு நின்று நோக்கினும் காணும் கண் கவர் காட்சிகள்.... அத்தனையும் நிறைந்துள்ளது அந்தமானின் தலைநகரான போர்ட் பிளேர். 1789ல் காப்டன் ஆர்ச்பால்டு பிளேர் என்னும் ஆங்கிலேயர் முதலில் இங்கு வந்து குடியேறியதால் இது அவர் பெயருடன் போர்ட் பிளேர் என விளங்குகிறது.

பல பிரிவுகளாய் விளங்கும் போர்ட்பிளேரில் அபர்தீன் மட்டும்தான் 'ஒன்னே ஒன்னு, கண்ணே கண்ணு' என 'பஜார்' ஆகும். அதுதான் இத் தீவுவாசிகளுக்குச் சொர்க்கம்! எல்லாப் பொருட்களும் கிடைக்கும் அங்கே. எந்த நேரமும் மக்கள் கூட்டம் இருக்கும்.

ஆசியாவின் பெரிய மர ஆலை சாத்தத்தில் உள்ளது. சாத்தம் போர்ட் பிளேரோடு ஒட்டிய சின்னஞ்சிறு தீவு. அழகானது. இரண்டையும் எழில் மிக்க மரப் பாலம் இணைக்கிறது.

போர்ட் பிளேரில்தான் உலகப் புகழ் வாய்ந்த அந்தமான் சிறை உள்ளது. சிறையின் ஏழு பிரிவுகளில் நான்கு பிரிவுகள் இடிக்கப்பட்டு அவைகளின் செங்கற்களால் மருத்துவமனை கட்டப்பட்டிருக்கிறது. இவை தவிர போர்ட்பிளேரின் வீடுகள் அனைத்தும் மர வீடுகளே. காரணம் செங்கல், கற்கள், சிமெண்டு கொண்டு வருவதில் அல்லது உற்பத்தி பண்ணுவதில் உள்ள சிரமம்தான். வீடுகள் மரங்களால் கட்டப்பட்டாலும் அவைகளுக்கு ஆகும் செலவு ஏறக்குறைய சிமெண்டு வீடுகளுக்காகும் செலவை எட்டிப் பிடிக்கிறது.

போர்ட் பிளேரின் சிறப்புக்களில் நத்தைகளும் ஒன்று! இந்த நத்தைகள் இந்தத் தீவுக்கு எப்படி வந்தன என்பது பற்றிப் பலவிதமாய்க் கூறப்படுகிறது. நத்தைகளை உணவுக்காக ஜப்பானியர் இங்கு கொண்டு வந்தனர் என்றும், சீனர்கள் அன்பு செலுத்தி வளர்ப்பதற்குக் கொண்டு வந்தனர் என்றும் கூறப்படுகிறது. யார் எதற்குக் கொண்டு வந்தார்களோ, இப்போது தீவு முழுதும் இந்த நத்தைகள் ஏராளமாய்ப் பெருகிவிட்டன. கோடை காலத்தில் எங்கிருக்குமோ தெரியாது; ஆனால் மழைக் காலத்தில்.... அப்பப்ப! ரோடு, வீடு, அடுப்பு, படுக்கை அறை...; எங்குமே இந்த நத்தைகளின் ஆதிக்கம் உண்டு! இரவில் சாலைகளில் பஸ்ஸோ, லாரியோ, டாக்ஸியோ சென்றால் 'சட சட' என்ற சத்தம் கேட்கும். அத்தனை





# குற்றத்தின் கோட்டை அமைதிக் காடாகியது!

□ இவ்வகை மான்கள் ஏராளமாய் உள்ள காரணத்தால்தான் இத்தீவுகளுக்கு "அந்தமான்" என்று பெயர் வந்ததோ...?

□ அந்தமான் தமிழர் சங்கக் கட்டிடம்.

□ போர்ட் பிளேரில் தென் முனைக் கடற்கரையின் எழில் தோற்றம்.



அடுத்த பக்கம் :

□ உலகம் பிரசித்தி பெற்ற அந்தமான் சிறையின் ஒரு தோற்றம்.

நத்தைகள் நசுக்குண்டு சாகும்! மனிதர்களின் கால்களாலும் மிதிபட்டுச் சாவதுண்டு!

இந்த நத்தைகளால் பயிர்களுக்கு மிகவும் சேதம் ஏற்படுகிறது. இவைகளை ஒழிப்பது மிகவும் கடினமாய் விட்டது. ஒரு நத்தை இருநூறிலிருந்து சுமார் அறுநூறு முட்டைகள் வரை இடுகிறது. அம்முட்டைகளிலிருந்து வரும் ஒவ்வொரு நத்தையும் பெரிதானவுடன் இதே அளவில் இன விருத்தி செய்கிறது. மளமளவென்று பெருகும் நத்தைகளை அழிப்பதற்காக 'நத்தை ஒழிப்பு' வாரங்கள் கொண்டாடப் படுகின்றன !.... இருந்தும் அவை ஒழியமாட்டேனென்கின்றன.

சென்ற ஆண்டு ஆகஸ்டு மாதம் இந்த நத்தைகளை ஒழிப்பதற்காகக் கோயமுத்தூரிலிருந்து ஒரு பயிர்ப் பாதுகாப்பு அதிகாரி இங்கு வந்து இரண்டு மாதங்கள் தங்கினர் என்றால்.... நத்தைகளின் புகழைச் சொல்லவா வேண்டும் ! அந்த அதிகாரி போர்ட் பிளேரை விட்டுத் திரும்பிப் போகும்போது, ''இனிமேல் இவைகளை ஒழிப்பது கடினம்!'' என்று தோல்வியை ஒப்புக் கொண்டு கூறி நத்தைகளின் புகழுக்குப் புகழ் சேர்த்தார்!

''நத்தைகளின் தொல்லை பெரிதாகி விட்டது. நத்தைகளை ஒழித்துப் பயிர்களையும், காய்கறிச் செடிகளையும், தோட்டங்களையும் பாதுகாக்கவும். வீடுகளில் அடுப்புப் பக்கம் நத்தைகள் வராது பார்த்துக் கொள்ளவும். அவற்றைப் பிடித்துக் குவிண்டால் ஒன்றுக்கு ரூபாய் ஐந்து வீதம் பெறுங்கள்!'' என அரசாங்கம் பத்திரிகைகளில் விளம்பரம் செய்தது !

போர்ட் பிளேரில் மே மாதத்திலிருந்து நவம்பர் வரை நல்ல மழை. அப்போது கிளிகள் ஏராளம் உண்டு. அவை கிள்ளை மொழி பேசிக் கொஞ்சுவதில்லை. குரல் உடைந்தது போல் 'கிர்...கிர்' எனக் கத்தும். மழைக் காலங்களில் போர்ட் பிளேர் எங்கும் பச்சைப் பசேலென்று விளங்கும். காலை மாலை வெய்யிலில் இரட்டை வானவில்லைக் காணலாம். தினமும் மழை பெய்தாலும் போக்குவரத்துக்கு இடைஞ்சலாகத் தண்ணீர் எங்கும் தேங்காது. இங்கு பெய்யும் மழையில் தினமும் நனைந்தாலும் உடம்புக்கு ஒன்றும் வராது. பலர் மழை நீரிலேயே குளிப்பர் !

இங்கு பெரிய பெரிய பூரான்கள் ஏராளமாய் உண்டு. சுமார் ஆறு ஏழு அங்குல நீளத்தில் விரல் பருமனில் பார்க்கப் பயங்கரமாயும் அருவருப்பாயும் இருக்கும். கொடுமையான விஷமுள்ளவை. எனவே, கட்டில் இல்லாத வீடு இல்லை! உணவுக்கான பலவகை மீன்கள் சுற்றிலும் உள்ள கடலில் ஏராளமாய் உள்ளன. மீன்கள் மலிவாய்க் கிடைக்கின்றன.

போர்ட் பிளேரில் வீட்டுப் பூனைகள் நிறைய உண்டு. ஒவ்வொன்றும் தடித்துப் பெரிதாய் இருக்கும். இந்தப் பூனைகள் மிகவும் சாந்தமானவை. ஆட்களையோ நாய்களையோ கண்டு இந்தப் பூனைகள் ஓடுவதில்லை. பதிலாகப் பயமின்றித் தெம்புடன் பக்கத்தில் வந்து நிற்கும் !

தமிழ் நாட்டில் இருப்பது போன்ற உணர்வே போர்ட்பிளேரில் இருக்கும். காரணம் பாரதியார் பாடிய அந்தத் 'தேமதுரத் தமிழோசை'யைச் சாலைகள், பஸ்கள், கடைகள், ஹோட்டல்கள், அலுவலகங்கள்... எங்குமே கேட்கலாம் ! 'தமிழ்ச் சங்க'மும் உண்டு. கடைகளின் அறிவிப்புப் பலகைகளில் தமிழ் உண்டு. போர்ட் பிளேரின் பிரபல வியாபாரிகளில் பலர் தமிழர் என்னும் போது மகிழ்ச்சி அடையாதிருக்க முடியாது!

போர்ட் பிளேரில் இதுவரை வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை ! இன்னும் ஓரிரு ஆண்டுகளில் அது ஏற்படலாம். காரணம் ஒவ்வொரு கப்பலிலும் இருநூறு முந்நூறு பேர் புதிதாய் வந்தவண்ணம் இருக்கின்றனர்.

போர்ட் பிளேரில் பிச்சைக்காரர்கள் கிடையாது ! பொறுக்கி எடுத்தால் பத்துப் பேர் இருப்பார்கள். அவர்களைக்கூட எப்போதும் பார்க்க முடியாது! வருங்காலத்தில் எப்படியோ .......?

சினிமா தியேட்டர் ஒன்றே ஒன்றுதான் உண்டு. அதற்குக் கிராக்கி அதிகம் என்றாலும்



தங்குவதில்லை: லோக்கல் ஜனங் களில் கலப்புத் திருமணங்கள் பதிவு முறையில் நிறைய நடக் கின்றன.

லோக்கலானாலும் மெயின் லேண்டானாலும் இங்கு வாழும் மக்கள் வியாபாரம், சர்க்கார் உத்தியோகம், கூலி வேலை என் னும் மூன்று பிரிவுகளில் அடங்கி விடுகின்றனர். பணப் புழக்கம் தாராளமாய் இருப்பதால் 'ஏழை – பணக்காரன்' என்ற வித்தி யாசம் அதிகம் இருப்பதில்லை !

ஏழையானாலும் பணக்காரனானா லும் கப்பலில் 'ரொட்டி' வந் தால்தான் ! இல்லையெனில் அனை வர் பாடும் ஐயோதான்! கையில் பணமும் இருக்கும் ! எனவே இங்கு அனைவரும் ஏறக்குறையச் சம உணர்வுடன் வாழ முடிகிறது! வட்டிக் கடைகள் குறைவு!



பிரபலமடைந்து வரும் முருகன் கோவில்.
(இன்னும் கட்டி முடிக்கப்படவில்லை)

பொதுவாக, 'சினிமா' என்ற பெயரில் செலவு குறைவே. இப்போது மற்றொரு தியேட்டர் கட்டப்பட்டு வருகிறது.

இங்கு அடிக்கடி 'காப்பி' குடிக்க வேண் டும் என்ற எண்ணம் எழாது. காரணம் பால் பிரச்னையே. போதுமான அளவு பால் இங்கு கிடைப்பதில்லை. ஒரு பசுவோ அன்றி எருமையோ வாங்குவதானால் ரூபாய் ஆயிரம் போட்டாலும் முடியாது. பின் பால் எப்படிக் கிடைக்கும்? கிடைக்கிற 'புட்டி'ப் பாலும் 'டின்' பாலும் கப்பல் வரத் தாமத மானால் தீர்ந்துவிடும். பின் 'காலாகாபி' தான் ! அதை யார் விரும்பி அருந்துவார்கள்?

போர்ட் பிளேயில் மக்களிடை சாதி மத வேற்றுமை உணர்வு குறைவு. உண்மையான இந்திய ஒருமைப்பாடு இங்குதான் இருக்கிறது என்றாலும் பொருந்தும். வங்காளி, தமிழ், மலையாளம், தெலுங்கு என்று மாநிலம் - மொழி அடிப்படையில் சிறு மாறுபாடுகள் இருந்தாலும் பொதுவாகச் சாதிமத அடிப் படையில் அவ்வளவு வேறுபாடுகள் இல்லை! மனம் விரும்பினால் யாரும் யாரையும் மணந்து கொள்ளலாம்! இந்துவாய் இருப்பவர் முஸ்லிமா யும், முஸ்லிமாய் இருப்பவர் கிறிஸ் தவராயும் கிறிஸ்துவர் இந்து வாகவும் மாறுவது இங்கு சகஜம். திருமணங்கள் நிமித்தம் இவ்வித மாற்றங்கள் சர்வ சாதாரணமாய் நடக்கின்றன.

போர்ட் பிளேரில் வாழும் மக்களில் 'லோக்கல், மெயின் லேண்ட்' என்று இரு வகை யுண்டு. லோக்கல் எனப்படுவோர் இங்கேயே குடியேறி விட்டவர். அவர்களில் சிறையில் கைதிகளாக இருந்தவர்களும் உண்டு.

'மெயின் லேண்ட்' எனப்படு வோர் சர்க்கார் உத்தியோகம், கூலி வேலை, மற்றும் பிற வேலைகள் நிமித்தம் வருபவர்கள். அவர்கள் பெரும்பாலும் நிரந்தரமாய்த்

போர்ட் பிளேரின் ஜீவநாடி ஒரிரு கப்பல்கள்தாம். அவை வரச் சில நாட்கள் தாமதமானாலும், கடைகளில், ''சீனியில்லை, உப்பு இல்லை, அரிசி இல்லை....'' என்ற பற்றுக்குறைப் பிரச்னை.

திங்கள்தோறும் அனைவரின் கண்களும் ஆகாயத்தைப் பார்த்து ஆனந்தம் கொள் ளும். ஆம், அன்புக் கடிதங்களைச் சுமந்து வரும் விமானத்தை அத்தனை பேரும் ஆவல் பொங்கப் பார்த்து நிற்பர் !

ஒரு சமயம் குற்றத்தின் கோட்டையாய், கொடுமைகளின் இருப்பிடமாய் விளங்கிய போர்ட் பிளேர் இன்று அமைதிக் காடாய் அன்பின் இருப்பிடமாய்; இன்பக் கோட்டை யாய்; எழில் ஊற்றாய்; ஆனந்த வெள்ள மாய் விளங்குகிறது. முன் நிலவுக் காலங்களில் தழுவி வரும் குளிர் காற்றில் கடற்கரைச் சாலை வழியே நடந்து கொண்டே யிருக்க வேண்டும் போல் தோன்றும்! — 'எம்மார்'



ஆசியாவிலேயே மிகப் பெரிதான மர ஆலை உள்ள சாத்தம் என்னும் சின்னஞ்சிறு அழகிய தீவு.

# 007 பாலு

கதை: குமரன்   படம்: விஜயா





### அத்தியாயம் ஏழு

## வந்தான் ரட்சகன்!

மூத்துசிவன் மெல்லச் சிரித்துக் கொண்டான். ''உனக்கென்று ஒரு பெண்ணைத் தேடி?....'' — இவ்வாறு வாய்விட்டுச் சொல்லியபடி மீண்டும் சிரித்தான் அவன். ''இதை அவர்கள் கொஞ்சம் மாற்றிச் சொல்லியிருக்க வேண்டுமே!... 'உனக்காகக் காத்துக் கொண்டிருக்கும் பெண்ணைப் பார்த்து உடனடியாக மணம் புரிந்து கொண்டு' என்று சொல்லியிருந்தால் மிகப் பொருத்தமாக இருந்திருக்கும்!''

அவன் முகம் வெட்கத்தால் கன்றிச் சிவந்தது. தான் பேசியது தன் அம்மாவின் காதில் விழுந்து விட்டிருக்குமோ என்று எண்ணியவனாய் வாசற் பக்கம் அவசரமாக எட்டிப் பார்த்தான்.

அன்னபூரணியம்மாளின் அறையில் விளக்கு அணைக்கப்பட்டு விட்டிருந்தது. அவள் தூங்கி விட்டாள் போலும்.

படுக்கையில் அப்படியும் இப்படியுமாகப் புரண்டு கொண்டிருந்த முத்துசிவன் ஏதோ ஒன்றால் நெம்பிவிடப் பட்டவன் போல் எழுந்து போய் அறை விளக்கைப் போட்டான்.

இன்று மதியம் மணப் பெண் மைதிலியை மாப்பிள்ளை வீட்டாரோடு ரயிலேற்றி அனுப்பி விட்டு சென்ட்ரல் ஸ்டேஷன் வராந்தாவில் அவன் நின்று கொண்டிருந்தபோது எதிர்பாராதவிதமாக அங்கு தன் சிநேகிதிகளுடன் வந்த சுகுணா அவனிடம் ஒன்றுமே பேசாமல்— அவனைப் பார்த்த மாதிரிகூடக் காட்டிக் கொள்ளாமல் — போய்விட்ட சம்பவம் இப்போது நினைவில் முட்டியதாலேயே அப்படித் திடுமென்று எழுந்து பின்னர் உட்கார்ந்தான்.

'அவள் ஏன் என்னைப் பார்த்தும் பாராதது போல் போனாள்? ஒருகால், பார்த்தே இருக்கமாட்டாளோ? அதெப்படிப் பார்க்காமல் இருக்க முடியும்? நான்தான் அவ்வளவு அருகில் நின்று கொண்டிருந்தேனே? பெண்கள் வேறு எதில் மந்தமாயிருந்தாலும் கட்புலன், செவிப் புலன் ஆகியவைகளில் மட்டும் ஆண்களைவிடப் பன்மடங்கு திட்சண்ய சக்தி பெற்றவர்களாயிற்றே!...... தன் சிநேகிதிகள் உடன் இருந்ததால் அவர்களெதிரில் என்னிடம் பேசக் கூச்சப்பட்டுக்கொண்டு அப்படிப் பார்க்காதமாதிரி போய்விட்டாளோ?... சரி; பேசத்தான் கூச்சம்; சும்மா ஒரக் கண்ணால் ஒரு பார்வை பார்த்துவிட்டுப் போயிருக்கலாம் அல்லவா?'

இவ்வளவு நேரம் மகிழ்ச்சிக் குறுகுறுப்புடன் விளங்கிய அவன் முகம் இப்போது இலேசாக வாட்டம் படர்ந்து வெளிறியது.

அவனுக்கு அது முதல் அனுபவம். தன் சொந்த விஷயம் ஒன்றைப் பற்றித் தனிமையில் அவன் சிந்திப்பது இதுவே முதல் முறை. அதனால்தானோ என்னவோ — அவனையுமறியாமல் ஒருவித சங்கோசப் புன்னகையுடன் எழுந்து போய் அறை விளக்கை மறுபடியும் அணைத்துவிட்டு வந்து உட்கார்ந்தான்.

பகலெல்லாம் பதுங்கிக் கிடக்கும் துரிஞ்சல் இருட்டானதும் தட்டுத் தடங்கலின்றிக் குறுக்கும் நெடுக்குமாக விரைந்து



# கிளிஞ்சல் கோபுரம்

ஜெகசிற்பியன்

பறப்பது போல் அவனுடைய சிந்தனையும் இப்போது நாணச் கணக்கத்தை உதறிவிட்டு அவ்விஷயத் தடத்தின் மேல் வேக நடை போடத் தொடங்கியது.

'ஓ!....சரிதான். கருணா என்னைப் பார்த்தும் பாராத மாதிரி போனதற்குக் காரணம் இப்போது புரிகிறது. உண்மையில் அவள் தன் பள்ளித் தலைமை ஆசிரியைக்கு ரயில் டிக்கட் வாங்குவதற்காக இன்று சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு வந்தாள் என்று சொல்ல முடியாது. அந்தக் காரியத்தை ஒரு சாக்காக வைத்துக் கொண்டு என்னை அவ்விடத்தில் — அந்நேரத்தில் — பார்க்கவேதான் வந்திருக்கிறாள். இதற்கு முன்னெல்லாம் என்னுடைய ஒவ்வொரு தங்கை, தம்பிகளுக்கும் திருமணமான மறுநாள் என்னை எங்கேனும் எப்படியேனும் சந்தித்து, எனக்காக அவள் காதல் நோன்பு நோற்றுக் கொண்டிருப்பதைச் சொல்லாமல் சொல்லி நினைவுறுத்தி விட்டுப் போயிருக்கிறாள், அல்லவா? அதே நோக்கத்துடன் தான் இன்றும் வந்திருக்கிறாள். ஆயினும் அவ்விஷயத்தை முன் போல் அத்தனை வெளிப்படையாக என்னிடம் நினைவுபடுத்த அவளுக்கு விருப்பமில்லை. ஏனென்றால், இன்று என் கடைசித் தங்கை மைதிலிக்குத் திருமணம் செய்வித்துக் கணவன் வீட்டுக்கு அனுப்பி வைத்திருக்கிறேன். இந்த நிகழ்ச்சியோடு எனது லட்சிய விரதமும் நிறைவெய்துகிறதென்பது அவளுக்கு நன்



ருகத் தெரியும். எனவே அடுத்து நான் செய்ய வேண்டியது அவளை மணந்து கொண்டு அவளுடைய காதல் நோன்பை வெற்றிகரமாக முடித்து வைப்பது ஒன்றுதான். இதுபற்றி இனி நான்தான் அவளைப் பார்த்துப் பேச வேண்டுமே தவிர அவள் அதை எனக்கு நினைவுபடுத்துவதோ, சொல்லிக் கேட்பதோ நாகரிகமல்ல, பண்பும் அகாது. அதனாலேயே இன்று அப்படி யொரு சாகஸ நாடகத்தை நடத்திக் காட்டி விட்டுச் சென்றிருக்கிறாள். அதாவது, என்னைப் பார்ப்பதற்காகவே வந்தவள், பார்த்தும் பாராதது மாதிரி வீம்பாகப் போயிருக்கிறாள்.'

மூர்த்தமிவன் ஓசையின்றி உடல் குலுங்கச் சிரித்தான். அப்படியும் அவனை மீறிக் கொண்டு 'ஹலக், ஹலக்' என்ற ஒலி கொஞ்சம் வெளியே வந்துவிட்டது. பக்கத்து அறையில் படுத்திருக்கும் தன் தாயாரின் காதில் அது விழுந்துவிடுமோ என்று அஞ்சியவனாய் உடனே தலையணையைத் தட்டிப் போர்வையை உதறி ஒலியெழுப்பித் தனது சிரிப்பொலியை அதில் கலக்கி மழுப்பிவிட்டான்.

'கருணை அவ்வாறு நடந்து கொண்டது நியாயமே! நாளை மாலை ஆபீஸிலிருந்து வீடு வந்ததும் முதல் காரியமாக அவளைப் பார்க்கப் போக வேண்டும்.'

இப்படி ஒரு தீர்மானத்துடன் படுக்கையில் சாய்ந்த அவன் இத்தனை காலமில்லாத பேரமைதி மனத்தில் நிறையச் சற்றைக்கெல்லாம் தூங்கிப் போனான்.

"மைதிலி!"

காலை ஆறு மணிக்குப் படுக்கையை விட்டு எழுந்ததிலிருந்து ஒன்பதரை



மணி வாக்கில் ஆபீசுக்குக் கிளம்புவதற்குள்ளாக — பற்பசை கேட்டு, துவாலை கொண்டுவரச் சொல்லி, பேனாவுக்கு இங்க் போட, சட்டைப் பித்தானைத் தேடி எடுக்க, காப்பிக்குச் சர்க்கரை போதவில்லை என்று புகார் செய்ய, சுவர்க் கடிகாரத்துக்குச் சாவி கொடுக்க, ஸ்கூட்டரில் பெட்ரோல் இருக்கிறதா என்று பார்க்க — என்றிப்படி குறைந்த பட்சம் ஓர் ஏழெட்டுத் தடவைகளாவது தன் அருமைத் தங்கை மைதிலியைக் கூவியழைத்து விட்டிருப்பான் முத்துசிவன்.

இதற்கு முன், முதல் தங்கை ஜானகி திருமணம் பண்ணிக் கொண்டு கணவன் வீட்டுக்குப் போனபோதுகூட இப்படித்தான் இரண்டு மூன்று தினங்கள் வரை அவளுடைய பெயரைச் சொல்லிக் கூப்பிட்டுக் கூப்பிட்டுப் பிறகு ஒருவாறு அந்தத் தடுமாற்றத்திலிருந்து தன்னைச் சமாளித்து நேர்படுத்திக் கொண்டான். ஆனால் அப்போதெல்லாம் இன்று தோன்றுவது போல் ஒரு புதுமாதிரியான உணர்ச்சி — அதாவது, தன்மீது இதுகாறும் சுற்றப்பட்டிருந்த ஏதோ ஒரு கயிறு தானாகத் தளர்ந்து பிரிவது போன்ற உணர்ச்சி — அவனுக்கு ஏற்பட்டதில்லை.

கடைசியாக, ஆபீஸுக்குப் புறப்பட ஸ்கூட்டரில் ஏறியபோது, 'மைதிலி, போயிட்டு வரேன்' என்று சொல்ல வாயெடுத்த உடனே, 'அவள் இல்லை' என்ற நினைவு நெஞ்சில் குபுக்கென்று முட்டியெழ, ''அம்மா, நான் போயி வரேன்!'' என்று சொன்ன அக்கணமே அந்த மாயக் கயிற்றின் பிணைப்பு முழுவதுமாக அவிழ்ந்து சரிந்து விட்டாற் போல் இருந்ததையும் அவன் மிகத் தெளிவாக உணர்ந்தான். அவனுக்கு அதில் ஒரு புதுவகைச் சுகம் ஊறுவதாகத் தோன்றியது. அதனால்தானோ என்னவோ இத்தனை நாள் இல்லாத ஒரு புதிய உற்சாகத்துடன் வெகு வேகமா ஸ்கூட்டரைக் கிளப்பிச் சென்றான்.

''ஹலோ சார், குட்மார்னிங்!''

வேகமாக ஸ்கூட்டரில் சென்றுகொண்டிருந்த முத்துசிவன் இந்தக் குரல் கேட்டுச் சட்டென்று வேகத்தைக் குறைத்தபடி தலை நிமிர்ந்தான்.

வலக் கையைத் தலைக்கு மேல் உயர்த்தி ஸ்டைலாக 'விஷ்' செய்தவாறு புன்முறுவலுடன் எதிரே வந்துகொண்டிருந்த வாலிபனொருவன் சற்றுத் தயங்கி நின்றான்.

அவனுக்கு வயது சுமார் இருபத்தெட்டு இருக்கும். ஹிந்தி, தமிழ் சினிமா உலகில் இன்று பிரபலமாகியுள்ள அத்தனை நடிகர்களையும்கொண்ட ஒரு போட்டோ ஆல்பத்திலிருந்து ஒவ்வொரு நடிகனின் ஓரொரு அங்கத்தைத் தனித் தனியாக வெட்டி ஒட்டி உருவாக்கினாற்போன்ற முகத் தோற்றத்துடனும் உடல் வாகுடனும் விளங்கிய அவன், காலே அரைக்கால் இடுப்பில் தொற்றிக் கடித்துக் கொண்டிருக்கும் பழுப்பு நிற டைட்-பேண்டும், அதே நிறத்திலான டெரீன் ஸ்லாக்கும், பித்தான் இடப்படாத பரந்த மார்பில் தந்தப் புலிப்பல் கோத்த தங்கச் சங்கிலி அணிந்து, சட்டையின் வலது ஜேபியில் கறுப்புக் கண்ணாடி மாட்டித் தொங்க, வலக் கையில் சிறிய தொரு தோல் பையுடன் நின்றதைக் காணக் கண் கோடி வேண்டும் போல் இருந்தது.

ஸ்கூட்டரின் வேகம் அவ்வாலிபனைக் கடந்த பிறகே கட்டுப்பட்டதால் ஒரு வட்டம் போட்டுத் திரும்பி வந்த முத்துசிவன் நடைபாதை ஓரமாக மெல்ல நிறுத்தி, கால்களை ஊன்றிக் கொண்டு, ''என்ன மிஸ்டர் ரட்சகன்! சௌக்கியமா?'' என்றான் நேசபாவமான குறுநகையுடன்.

''இருக்கிறேன் சார்! உங்களைப் பார்க்கத்தான் இப்ப வந்துக்கிட்டிருக்கிறேன். நல்ல வேளை, வழியிலேயே பார்த்துட்டேன்'' என்றவாறு தான் அணிந்திருந்த உடைக்கேற்றவாறு நடையும், நடைக்கேற்ற புன்னகையுமாக அருகில் வந்தான் ரட்சகன் என்ற அவ்வாலிபன்.

''அப்படியா?... என்ன விசேஷம்?'' என்று கேட்டுக் கொண்டே அவனுடைய இடது கையைக் கூர்ந்து நோக்கினான் முத்துசிவன்.

''ஆபீசுக்குத்தானே போறீங்க, சார்! நான் அங்கேயே வந்து பேசிக்கிறேனே!...''

''பரவாயில்லே; சொல்லு!''

''வழியிலே நிறுத்திச் சிரமம் கொடுக்கிறதுக்காக மன்னிக்கணும்...'' என்று நாடக பாணியில் ஒரு குலுக்குச் சிரிப்புடன் கூறிய ரட்சகன் அவசரமாகத் தன் கால் சட்டைப் பின்புற ஜேபியில் விரல்களை விட்டுத் துழாவியதைக் கண்டதுமே கடகடவென்று சிரித்து விட்டான் முத்துசிவன்.

''ஏன் சார், சிரிக்கிறீங்க?'' என்று இடுக்குற்றாற்போல் கேட்டான் ரட்சகன்.

''நாடக டிக்கட் புத்தகத்தைத் தானே எடுக்கிறே?''

ரட்சகனின் முகத்தில் அசடு வழிந்தது. அதை மறைக்கப் புன்னகை பூப்பதுடன் வேறு உபாயமும் கிடைக்குமா என்று யோசிப்பவன் மாதிரி அங்கு மிங்கும் பார்த்துப் பின் எதுவும்

சட்டென்று புத்திக்குத் தட்டுப்படாமற் போகவே அந்தப் புன்னகையை இன்னும் கொஞ்சம் விரிவு படுத்திக் கொண்டு, ''ஆமாம், சார்!'' என்றான் போலியான உற்சாகக் குரலில்.

''என்ன நாடகம் போடப் போறேப்பா?''

''அற்புதமான நாடகம் சார்! அருமையான சோஷியல் டிராமா! மெட்ராஸையே ஒரு கலக்குக் கலக்கப் போறேன்!''

''இப்ப என் வயித்தைக் கலக்குது!''

''நீங்க அவசியம் வந்து பார்க்கணும் சார்!''

''பார்த்தாப் போச்சு.''

''என்ன ஸார் வழக்கமான பதிலே சொல்றீங்களே!''

''சில வழக்கமான கேள்விகளுக்கு வழக்கமான பதில்கள் சொல்வது தான் என் வழக்கம்.''

''ஆகா! அருமையான டயலாக்!'' என்று விரலைச் சொடுக்கி 'இச்'கக் கொட்டி ரசித்தான் ரட்சகன்.

''அப்புறம்?.... உன் அடுத்த டயலாக்கை ஆரம்பிப்பா!'' என்று கேலி செய்தான் முத்துசிவன்.

ரட்சகனின் முகத்தில் மீண்டும் அசடு வழிந்தது. ''ஐஞ்சைக் கிழிக்கட்டுமா, பத்தைக் கிழிக்கட்டுமா சார்?... பத்தையே கிழிச்சுடறேனே!'' என்று சொல்லிக் கொண்டே தன் ஜேபியிலிருந்து எடுத்த டிக்கெட் புத்தகத்தைப் பிரித்துச் சரக்கென்று ஒரு டிக்கட்டைக் கிழித்து முத்துசிவனின் சட்டைப் பையில் திணித்தான்.

''அட, பாவி! பத்து ரூபாயா?.... பகல் கொள்ளை!''

''எங்க நாடகத்தின் பேரே அது தான் சார்! பகல் கொள்ளை!'' என்று கூறி நகைத்தான் ரட்சகன்.

''கஷ்ட காலம்!'' என்று முணு முணுத்துக் கொண்டே பணத்தை எடுத்துக் கொடுத்து விட்டு, ''ஆமாம்; இந்த உன் 'பகல் கொள்ளை' என்றைக்கு நடக்கப் போகிறது?'' என்று மெல்லச் சிரித்துக் கேட்டான் முத்து சிவன்.

''நாளை மாலை ஆறு மணிக்கு என்று தான் போஸ்டர்லே அச்சடிச்சிருக்கிறேன்; எப்படியும் இரவு ஏழு மணிக்காவது ஆரம்பிச்சுடுவோம். மறக்காமல் வந்துடுங்க சார்!'' என்று சொன்ன ரட்சகன், ''மன்னிக்கணும். இப்ப அவசரமா எங்க ஹீரோயினைப் பார்க்கப் போறேன். இன்னொரு நாள் சாவகாசமா வந்து சந்திக்கிறேன்'' என்றவாறு பின்னால் நகர்ந்தான்.



**சோளக் கொல்லை பொம்மை - நவீன தயாரிப்பு!**

கொடிகள் தழுவி வளர்வதற்காகக் கம்புகள் நடப்பட்டிருப்பதைப் படத்தில் காண்கிறீர்கள். அதற்கு முன்னால் பெட்டிபோல் இருப்பது சோளக் கொல்லை பொம்மை - நவீன மாடல்!

பறவைகளை வயல்களிலிருந்து விரட்டி அடிப்பதற்காக எலெக்ட்ரானிக் ஒலி எழுப்புகிறது இந்த மின் சாதனம். அதைக் கேட்டுப் பறவைகள் பயந்து பறந்துவிடும். நாளடைவில் இந்த ஒலி பழக்கப்பட்டுப்போய் பறவைகள் அதற்குப் பயம் படாமல் பயிரைக் கொத்த ஆரம்பித்தால்....? அப்படி நடக்காதிருக்க ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புது விதமான ஒலியை எழுப்புமாறு இந்தச் சாதனத்தில் ஏற்பாடு செய்து கொள்ளலாம்.

ஆதாரம்: ஜெர்மன் இன்டர்நேஷனல்

---

''அவசியம் வருவேன்னு நம்பறேன், இன்னொரு நாடகத்தின் டிக்கட் புத்தகத்தை எடுத்துக்கிட்டு!'' என்று குறும்பாகக் கண் சிமிட்டிச் சொல்லியபடி ஸ்கூட்டரைக் கிளப்பிச் சென்று விட்டான் முத்துசிவன்.

'அப்பா! இன்றைக்கு நான் எங்க ஸ்கூல் கரஸ்பாண்டன்ட்கிட்ட முடிவாகச் சொல்லிவிட்டேன், அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள முடியாதுன்னு!''

உற்சாகமான குரலில் இவ்வாறு கூறிக் கொண்டே அவ்வழகிய புதிய பங்களாவினுள் பிரவேசித்த கருணை தன் தோளில் தொங்கிய சஞ்சியையும், கையணைப்பிலிருந்த புத்தகங்களையும் மேஜை மேல் போட்டுவிட்டு வந்து கூடை நாற்காலியொன்றில் சாய்ந்தான்.

இவ்வளவு நேரம் யாருடனோ டெலிஃபோனில் பேசிக் கொண்டிருந்த அவன் தந்தை கனகசபை மெல்லத் திரும்பிப்

பார்த்துப் புன்முறுவல் பூத்தார். பிறகு மீண்டும் அவர் ஃபோனில், ''சரி; அப்ப நேரிலேயே வந்துடறீங்களா ? நான் வீட்டில்தான் இருக்கிறேன்.... பேசுவோம்..... வாங்க....'' என்று பேச்சை அதோடு முடித்து ரிஸீவரை வைத்து விட்டு வந்து, ''என்ன சொன்னே சுகுணா ? எதை முடிவாகச் சொல்லி விட்டேங்கிறே ?'' என்று அன்பும் பாசமும் கலந்த குரலில் கேட்டவாறு சோபாவில் அமர்ந்தார்.

''அதுதாம்பா ! எங்க ஸ்கூல் ஹெட் மிஸ்ட்ரஸ் வேலையை விட்டுட்டு டெல்லிக்குப் போயிட்டாங்கன்னு நேற்று சொன்னேன் இல்லையா ? அந்தக் காலியான பதவியை ஏற்றுக் கொள்ளும்படி என்னைக் கேட்டுக்கிட்டார் பள்ளிக்கூட நிர்வாகி. என் சக ஆசிரியைகளும் என்னையே சிபாரிசு செய்தாங்க. கடந்த ஒரு வாரமாகவே இந்தப் பேச்சு அடிபட்டுக்கிட்டிருந்தது. நானும் யோசிச்சுச் சொல்றேன்னு நாளைக் கடத்திக்கிட்டு வந்து, இன்றைக்கு அதை முடிவாகச் சொல்லியும் விட்டேன், என்னாலே அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள முடியாதுன்னு. ஸ்கூல் மானேஜ்மெண்டாருக்கு ரொம்ப வருத்தம். என்ன பண்றது? ஐஞ்சு வருஷ அனுபவமே உள்ள ஓர் இளம் டீச்சரைத் தாற்காலிகமாக அமர்த்தியிருக்கிறாங்க !'' என்று கலகலப்பான குரலில் சொல்லிக் கொண்டே எழுந்த சுகுணா மாடிப் படிகளை நோக்கி நடந்தாள்.

''எல்லாம் சரிதாம்மா ! ஆனால் நான் இதுபற்றி என்ன நினைக்கிறேன்னு உனக்குத் தெரியுமா?'' என்று எங்கோ யோசனையாகத் தம் வழுக்கைத் தலையைத் தடவியவாறு மெல்ல இழுத்து நிறுத்தினார் கனகசபை.

மாடிப் படியில் காலை வைத்த சுகுணா சட்டென்று திரும்பி, ''நீங்க என்ன அப்பா நினைக்கிறீங்க?'' என்று கேட்டாள்.

தயக்கப் புன்னகையுடன் அவளையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்த கனகசபை, ''ஒண்ணுமில்லே !....வந்து உன் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியைப் பொறுப்பை நீ ஏற்றுக்கமாட்டேன்னு சொன்னதோடு, இப்ப செய்து வருகிற டீச்சர் வேலையையும் விட்டுட்டேன்னு வந்து சொல்லியிருந்தால் நான் ரொம்ப சந்தோஷப்பட்டிருப்பேன் '' என்றார்.

'' அதைச் சொல்லுங்க ! நானும் அதைத்தான் தலையாலே அடிச்சிக்கிட்டிருக்கிறேன், அவன் கேட்டால் தானே ?'' என்று ஓசையாக நீட்டி முழக்கியவாறு காப்பி தம்ளருடன் உள்ளிருந்து கூடத்து அறைக்கு வந்தாள் சுகுணவின் தாயார் சொர்ணத்தம்மாள்.

'' நீ ஆரம்பத்திலிருந்தே சொல்லிக்கிட்டிருக்கிறே; நான் இப்பத்தானே சொல்றேன்?'' என்று இளநகையுடன் தம் மனைவியைப் பார்த்த கனகசபை, ''அப்படி சொன்னதுக்கும் காரணம் இருக்குது !'' என்றார்.

'' என்ன அப்பா அந்தக் காரணம் ?'' என்று ஒன்றும் புரியாதவள் போல் வினவினாள் சுகுணா.

'' ஏன், அது உனக்கே தெரியாதோ ?'' என்று பாதிக் கோபமும் பாதிச் சிரிப்புமாகத் திருப்பிக் கேட்டாள் சொர்ணத்தம்மாள்.

''சரி, சரி; குழந்தை களைச்சு வந்திருக்குது. போய் காப்பி பலகாரம் கொடு. அப்புறம் சாவகாசமாப் பேசிக்கலாம் '' என்று தம் மனைவியை அடக்கினார் கனகசபை.

சொர்ணத்தம்மாளுக்கு இப்போது நிஜமாகவே கோபம் வந்துவிட்டது. ''எல்லாம் நீங்க கொடுக்கிற செல்லத்தில்தான் அவள் இஷ்டத்துக்கு அடம் பிடிக்கிறாள். வயசு என்ன ஆச்சு, கணக்குப் போட்டுப் பாருங்க! முப்பத்தொண்ணு முடிஞ்சுப் போச்சு. கேட்கிற மனுஷாளுக்கு நான் இன்னும் தான் என்ன சாக்குப் போக்குச் சொல்லிக்கிட்டிருப்பேன் ? காலில் செருப்பும், கையிலே குடையுமாக இவள் வாத்திச்சி வேலை பார்க்கப் போய்த் தொண்டை ஆவி கரையக் கத்திச் சம்பாதிக்கச் சொல்லி யார் அடிச்சா ? எதுக்கு அந்தச் சம்பாத்தியம்? இங்கே இருக்கிறது போதாதா? இனியும் என்னால் பொறுத்துக்க முடியாது; சட்டுப்புட்டுன்னு ஒரு நல்ல காரியத்தை அவளுக்கு முடிச்சு வைக்கிறதைப் பாருங்க, ஆமாம்!'' என்று பொரிந்து தள்ளிக் கொண்டே காப்பியை டீப்பாயின் மேல் வைத்து விட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

அங்கே நின்றிருந்த சுகுணாவைக் காணோம். அவள் எப்போதோ மாடிக்குப் போய் விட்டிருந்தாள் !

வீட்டு வாசலில் ஒரு 'ஸ்டேஷன் வாகன்' வந்து நிற்கவே சொர்ணத்தம்மாள் எட்டிப் பார்த்து விட்டு, '' யாரோ வராங்க !'' என்று தனக்குள் முனகியவாறு உள்ளே போய் விட்டாள்.

'' வணக்கம், சார் !'' என்று ஒரே குரலில் கூறிக் கைகுவித்தவாறு இரு வாலிபர்கள் வந்து போர்ட்டிகோவில் தயங்கி நின்றார்கள். **(தொடரும்)**

# ஆல்விடோன்

## குறைந்த செலவில் அதீக ஆரோக்கியம்!

இதர உணவு பானம் எதையும் விட விலை குறைந்தது ஆல்விடோன். இருந்தும் அதில் ஆரோக்கியம் அளிக்கும் பொருள்கள் குறைவில்லாமல் இருக்கின்றன.

ஆல்விடோனில் மட்டுமே புரதச் சத்து நிறைந்த பாதாம் அடங்கியிருக்கிறது. பார்லிமால்ட், ஆடைச் சத்து நிறைந்த பால், கொக்கோ ஆகியவற்றைக் கொண்டு தயாரிக்கப்படுவது ஆல்விடோன். வைட்டமின் ஏ. பி, பி2, மற்றும் டி. இரும்புச் சத்து, கால்சியம் நிறைந்தது.






உடலுக்கு உற்சாகம் அளிப்பது ஆல்விடோன். நரம்புகளுக்கு வலுவூட்டுகிறது. நோயாளிகள், குழந்தைகள், பாலூட்டும் தாய்மார்களுக்கு ஏற்ற உணவு பானம்.

*தயாரிப்பவர்கள்:*

**ஆல்விடோன் லாபாரடரீஸ்**

மதராஸ்-43.

சென்னை நகரில் ஒரு கப் ஆல்விடோன் வாங்கி அருந்தி ஒரு உன்னத பரிசைப் பெறுங்கள். இப்பரிசுத் திட்டம் பற்றிய விவரங்கள் நகரின் பிரபல ஹோட்டல்களில் கிடைக்கும்

3—1—12

## தாம்பத்ய உறவு

ஜெர்மனியில் ஒரு காரியாலயத்தில் காரியதரிசியாகப் பணியாற்றிய அழகி உர்ஷுலா 'சிறந்த காரியதரிசி' என்னும் பட்டம் பெற்றாள். சில மாதங்களுக்குப் பின் தன் முதலாளியையே மணம் செய்து கொண்டாள்! இவர்களுக்குள் ஏதோ மனஸ்தாபம் ஏற்பட்டுக் கடைசியில் விவாகரத்தில் முடிந்தது. உர்ஷுலா பழையபடி அதே முதலாளியிடம் (மாஜி கணவரிடம்) காரியதரிசியாக வேலை செய்கிறாள்! அவள் கூறுகிறாள்: "ஒரு ஆணுக்கும் பெண்ணுக்குமிடையில் தொழில், உத்யோக முறையில் நட்பை நிலைநாட்டுவது சுலபம்; ஆனால் தம்பதிகளாக விளங்கி நல்லுறவை நீடிக்கச் செய்வது மிக மிகக் கஷ்டம்!"

ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்டு' தகவல்: ச. ஸ்ரீதரன்






இரண்டு பேர் பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்தார்கள். ஒருவர் மற்றொருவரிடம் கேட்டார்:

"நீங்கள் என்ன நம்பர் பஸ்ஸில் போக வேண்டும்?"

"1-ம் நம்பர். நீங்கள்?"

"2-ம் நம்பர்."

12-ம் நம்பர் பஸ் வந்தது. இருவருமே ஏறிப் போய்விட்டார்கள்!

- சக்கிரபுத்தி

## பொறுமையுள்ள பிராணி....!

அமெரிக்காவின் குடியரசுக் கட்சியும், ஜனநாயகக் கட்சியும் யானையையும், கழுதையையும் தங்கள் சின்னமாக வைத்திருக்கின்றனர். இவை இரண்டும்தான் பொறுமையாக அதிகச் சுமை சுமக்கும் பிராணிகள் என்பது காரணமாக இருக்கலாம். அப்படியானால் மூன்றாவதாக ஒரு புதுக் கட்சியை யாரேனும் ஆரம்பித்தால் வரி செலுத்தும் மனிதனைச் சின்னமாக வைத்துக் கொள்ளலாம். இப் பிராணியைத் தவிர அதிகமான சுமையை எதன்மீது ஏற்ற முடியும்?

- ஓர் அமெரிக்க நகைச்சுவை எழுத்தாளரின் கூற்று. 'அ'



## பேச்சாளர்கள்

பெண்கள்தான் அதிகமாகப் பேசுகிறார்கள் என்று சொல்கிறோம். ஆனால் ஷேக்ஸ்பியர் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஏனென்றால் அவருடைய கதாபாத்திரங்களில் அதிகமாகப் பேசுபவர்கள் ஆண்கள்தான் — இளவரசன் ஹாம்லெட் மொத்தம் 1569 வரிகள் பேசுகிறான். ஷேக்ஸ்பியரின் கதாநாயகிகளில் அதிகமாகப் பேசும் கிளியோபாட்ரா கூட 670 வரிகள்தான் பேசுகிறாள்.

'பிலால்'



## 29,000 வழக்குகள்

சின்ன விஷயங்களுக்குக்கூட நீதிமன்றத்துக்குப் போவதில் இந்தியாதான் முதலிடம் வகிக்கிறது. சான்றாக, கல்கத்தா உயர்நீதி மன்றத்தைச் சேர்ந்த பல்வேறு 'ஸ்மால் காஸஸ் கோர்ட்டு'களில் பத்து ரூபாய்க்கும் குறைந்த தொகை சம்பந்தமாக 29,000 வழக்குகள் விசாரணையில் இருக்கின்றன.

ஆதாரம்: 'மெயில்'

தகவல்: 'சாந்தன்'



## கேள்வி, ஜாக்கிரதை!

ஒரு இரவு போலீஸ்காரர் லாரியை நிறுத்தி விசாரித்தார்:

"யோவ்! பிரேக் சரியா இருக்கா?"

"இருக்கு."

"டயர் புதுசுதானா?"

"ஆமாங்க."

"லைட் சரியா எரியுதா?"

"எரியுதுங்க."

"சரி சரி! போற வழியிலே என்னை என் வீட்டிலே விட்டு விட்டுப் போ!"

- சக்கிரபுத்தி



வாசலில் ஸ்கூட்டர் வந்து நிற்கிற சப்தம்.

மறு நாள் சாமி படங்களுக்குப் போடுவதற்காகப் பூ முடிந்து கொண்டிருந்த புனிதம், எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டு வாசலுக்கு ஓடி வந்தாள். மை தீட்டிய அவள் விழிகளில்தான் எத்தனை ஆர்வம்!

சாரங்கன் ஸ்கூட்டரைத் தள்ள முடியாமல் தள்ளிக் கொண்டு வந்து வராந்தாவில் நிறுத்திவிட்டு 'உஷ்' என்று ஒரு பெருமூச்சுவிட்டான்.

''அப்பாய்ண்ட் மெண்ட் ஆர்டர் வாங்கிக்கிட்டு வந்துட்டீங்களா?''

எப்படி இருக்கிறது கதை! களைத்துப் போய் வந்திருக்கும் கணவனை மனைவி உபசரிக்கும் முறையா இது? சாரங்களுக்குப் பற்றி எரிந்து கொண்டு வந்தது கோபம். புனிதத்தைப் பார்த்தானே ஒரு பார்வை!

அவள் சுதாரித்துக் கொண்டு விட்டாள்.

''ரொம்ப களைச்சிப் போய் வந்திருக்கீங்களே! காப்பி போட்டுத் தரட்டுமா? நீங்க வந்துடுவீங்க, வந்துடுவீங்கன்னு இவ்வளவு நேரம் வச்சிருந்து சில்லின்னு ஆறிப் போயிட்டது. ஒரு நிமிஷத்திலே...''

அவள் பேசிக் கொண்டேயிருக்க அவன் உள்ளே வந்து அமர்ந்து காலை இறுக்கிக் கொண்டிருக்கும் பூட்ஸைக் கழற்றத் தொடங்கினான். புனிதம் மெல்ல அடி எடுத்து வைத்து வந்து அவன் காலருகே உட்கார்ந்து பூட்ஸைக் கழற்றக் கையைக் கொண்டு போனாள். வெளிக்குத்தான் இத்தனை உபசாரங்களும். உள்ளத்தை ஆவல் தின்று கொண்டிருந்தது.

''வேண்டாம், வேண்டாம்! நீ போய்க் காப்பி போட்டுக் கொண்டு வா.''

''இதோ, ஒரு நிமிஷம்!'' என்று உள்ளே துள்ளிப் பாய்ந்த புனிதம், அடுத்து ஐந்து நிமிஷங்களில் 'ஆவி பறக்க, வாசனை மணக்கக் காப்பியைக் கொண்டு வந்த பொழுது, சாரங்களுக்கு வலப்புறத்தில் இருந்த முக்காலி மீது டைப் செய்யப்பட்ட ஒரு நீண்ட காகிதம் இருந்தது. ''என்ன இது?'' என்று காப்பியை அவனிடம் நீட்டியபடி, கண் பார்வையை அந்தக் காகிதத்தின் மேல் திருப்பிய புனிதத்துக்கு மகிழ்ச்சியால் முகம் மலர்ந்து விட்டது.

'' 'அப்பாய்ண்ட் மெண்ட் ஆர்டர்'ரா?'' 'கபக்'கென்று அள்ளிக் கொண்டாள். பார்வை வரிக்கு வரி தாவி ஓடியது. ஆம், உத்தியோகத்துக்கான உத்தரவுக் கடிதம் தான்! அப்பாடா! கடைசியில் வேலை கிடைத்தே விட்டது.

களிப்பும் நன்றியும் பொங்கக் கணவனைப் பார்த்தாள் அவள். ஆனால் அவனோ காப்பியை ருசிப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தான்.

''ரொம்பவும் தாங்ஸ்ங்க....'' வார்த்தை களைத் தொடர்ந்து குறும்புச் சிரிப்பொன்று மலர்ந்தது.

''ஆமாம், தாங்ஸாம்! உன் தாங்ஸைக் கொண்டு போய் உடைப்பிலே போடு. இந்த 'ஆர்டரை' வாங்கறதுக்குள்ளே நான் பட்ட பாடு! அந்த ஜெனரல் மானேஜர் காலிலே விழாத குறை. கடைசியிலே அவர் கையிலே ஒரு பத்து ரூபாயைத் திணிச்ச பிறகுதான்..''

அவன் பட்ட சிரமங்களெல்லாம் அவளுக்குப் பெரிதல்ல. வேலை கிடைத்து விட்டதே!

''பரவாயில்லே அத்தான். எனக்காகத் தானே சிரமப்பட்டீங்க. இன்றைக்கும் நீங்க இந்த ஆர்டரை வாங்காம வந்திருந்தீங்கன்னு....!''

''வந்திருந்தேன்னு ?''

''உங்ககிட்டே பேசக்கூட மாட்டேன்.''

என்னவோ அவள் கொஞ்சுவது அப்போது அவனுக்கு எரிச்சலைத் தந்தது.

''புனிதம், நான் பட்ட சிரமங்களைப் பெரிதாக நினைக்கிறேன்னு அர்த்தமில்லே. தேவையில்லாத ஒன்றுக்காக எவ்வளவு வீண் தொந்தரவு?'' என்றான் அவன் நிதானமாக.



''தேவையில்லாத ஒன்று? உங்களுக்கு இதே பேச்சுத்தான். இந்த உலகத்திலே தேவையில்லாததுன்னு எதுவுமே இல்லே.''

'' இங்கே பார்! தத்துவமெல்லாம் பேசாதே!''

''பிறகென்ன? நீங்க மட்டும் வேலைக்குப் போகணும்ன்னு தேவை இருக்கா? கிராமத்திலே மாமாவுக்குத் துணையாக இருந்து வயல் வரப்பைப் பார்த்துக்கிட்டா போதாதா?''

''ஆமாம், எதிர்ப்பாட்டு பாடு நீ! இவ்வளவு செலவு பண்ணிப் படிச்சிட்டு, அந்தப் படிப்பினாலே ஒரு பத்து ரூபாகூடச் சம்பாதிக்காமல் நானும் விவசாயம்ன்னு போயிட்டா எப்படி? ஏற்கனவே என் அண்ணன்மார்கள் இரண்டு பேரும் பி. ஏ. படிச்சிட்டு....''

''அப்படி வாங்க வழிக்கு. செலவு பண்ணிப் படிச்சதுக்குப் பதிலா சம்பாதிக்கணும்ன்னு சொல்றீங்களே. நானும் அந்த மாதிரிதான் நினைக்கிறேன். நீங்க எம். ஏ. படிச்சீங்க. நான் பி. ஏ. படிச்சேன். உங்க படிப்புக்கு நீங்க ஆபீசர். என் படிப்புக்கு நான் ஒரு கிளார்க்காகவாவது....''

''நான் அதுக்காக சொல்லலே, புனிதம்!''

''நீங்க எதுக்காகவும் சொல்ல வேண்டாம். நான் வேலைக்குப் போய்த்தான் தீருவேன். நீங்க ஆபிசுக்குப் போனதுக்கப்புறம் நான் மட்டும் இங்கே தனியா உட்கார்ந்துகிட்டு ஒரே எரிச்சலா இருக்கு.''

''சரி..... சரி..... பேச்சை விடு. நாய் வாலே நிமிர்த்த முடியாது.''

''நான் நிமிர்த்திட்டேனே!'' என்றுள் புனிதம் நமட்டுச் சிரிப்புடன்.

''நீ என்ன சொல்றே?''

'' பிறகென்ன? 'உன்னே வேலைக்கு அனுப்பப் போறதில்லே'ன்னு நீங்க சொல்லிக்கிட்டுத்தான் இருந்தீங்க. ஆனல் நான் விட்டேனு? தினம் உங்களை நச்சரித்து ஒரு வேலே வாங்கிட்டேனு இல்லையா?'' என்று அவள் குழந்தைத்தனமாகக் குதூகலித்த பொழுது சாரங்கனும் மகிழ்ந்துதான் போனுன்.

''எப்பவுமே தோற்கிறது ஆண்கள்தான். இப்படி உட்கார்!''

சோபாவில் அவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டாள் புனிதம்.

''பத்து மணிக்கு நீ என்னேடு புறப்பட்டு ஸ்கூட்டர்லே வர்றது சரி. அதுக்குள்ளே




# சிவம்-சக்தி

டி.கே.டி. துரைராசன்

வீட்டு வேலைகளை யெல்லாம் முடிந்து விடுவாயா ?''

''ஏன் முடியாது? வேணும்னு 'பெட்' கட்டுங்க. எட்டு மணிக்கே முடிச்சிட்டு ஒரு தூக்கம் போட்டுக் காண்பிக்கிறேன்.''

சாரங்கனுக்கு வாயடைத்துப் போயிற்று.

''என்ன பேசாமல் இருக்கீங்க ?''

''நீ செய்தாலும் செய்வே !'' என்று கூறிய சாரங்கன், ''இங்கே பார், புனிதம்! நீ வேலை பார்க்கப் போறது பிரைவேட் கம்பெனியிலே. ரொம்பவும் கரெக்டா இருக்க ணும். சொல்ற வேலையை உடனுக்குடன் செய்து விடணும். அது மட்டுமில்லே. வீட்டு வேலைகளைப் பற்றி ஆபீஸ்லேயும், ஆபீஸ் வேலைகளைப் பற்றி வீட்டிலேயும் நினைச்சுக் கிட்டு இருக்கக் கூடாது. நான் சொல்றது புரியுதா ?''

''நல்லாப் புரியுது. நானும் உங்களுக்கு ஒண்ணு சொல்லிக்கிறேன். இத்தனை நாள் போல எல்லா வீட்டு வேலைகளையும் இனிமேல் நான்தான் செய்யணும்னு நீங்க நினைக்கக் கூடாது. நீங்களும் ஏதாவது வேலை செய்ய ணும். புரியுதா ?''

சாரங்கனுக்கு வெகு நன்றாகவே புரிந்தது. அதனால் அர்த்தமுள்ள ஒரு மௌனத்தில் ஆழ்ந்து விட்டான் அவன்.

முதல் தேதியன்று மாலை ஐந்தரை மணி. கடற்கரையில் இருந்த அந்த நாகரிகமான ஹோட்டலுக்குள் ஒரு ஸ்கூட்டர் நுழைந்து நின்றது.

''வாங்க அத்தான். உங்களுக்கு என் னென்ன சாப்பிட இஷ்டமோ, எல்லாம் சாப்பிடுங்க, என் உபயம்!'' என்று பூரிப் போடு கூறினாள் புனிதம்.

அவர்கள் இருவரும் மாடிப்படி ஏறிச் சென்று, மாருதம் தவழும் கடற்கரையின் இனிமையை நுகர்ந்தபடி அமர்ந்தனர்.

'' என்ன அத்தான், சாப்பிடுறீங்க ?'' என்று உபசரிப்பைத் தொடங்கினாள் புனிதம்.

''அதெல்லாம் இருக்கட்டும். இன்றைக்கு எவ்வளவு சம்பளம் கொடுத்தாங்க?''

''இருபது நாள்தானே வேலை பார்த்திருக் கிறேன். இருநூற்றிப் பத்து ரூபாய் கொடுத் தாங்க'' — இதைச் சொன்ன பொழுது ஏதோ இரண்டு லட்சம் ரூபாய் வாங்கியதைப் போல் பெருமிதம் தொனித்தது அவள் குரலில். நியாயம்தானே ? கால் காசு என்றா லும் அவள் கைநோக உழைத்துச் சம்பாதித் தது அல்லவா ?

எதையெதையோ சாப்பிட்டு முடித்த வுடன் சர்வர் 'பில்' கொண்டு வந்து வைத் தான். சிறிது நேரம் கழித்து இருவரும் வெளியில் வந்தார்கள்.

''இனி எங்கே போகலாம் அத்தான் ?''

''ஏன், வீட்டுக்குத்தான்.''

''போங்க அத்தான். 'போர்' அடிக்குது. ஏதாவதொரு சினிமாவுக்குப் போகலாம்.''

''சரி'' என்று சொல்வதைத் தவிர சாரங்க னிடமிருந்து மறு பேச்சில்லை.

''ஆனால் ஒரு நிபந்தனை. என் பணத்தில் தான் டிக்கெட் எடுக்கணும்'' என்றாள் புனிதம்.

''தாராளமா !''

சினிமா தியேட்டர் வந்ததும் தானே போய் இரண்டு உயர்ந்த வகுப்பு டிக்கட் எடுத்துக் கொண்டு வந்த புனிதம், உள்ளே சென்று அமர்ந்தவுடன் பேச்சைத் தொடங் கினாள் :

''அத்தான். எனக்கு ஒரு ஆசை.''

''என்ன?''

''மீதமிருக்கிற என் பணத்தைப் போட்டு என் பெயரில் ஒரு பாங்க் அக்கௌண்ட் ஆரம்பிச்சுடலாம்னு.....''

''இப்ப இருக்கிற அக்கௌண்டே உன் பேரிலேதானே இருக்கு?''

''அது வேறே.... இது வேறே... இனி மேல் ஒவ்வொரு மாசமும் என் சம்பளப் பணத்தை அந்தப் புது அக்கௌண்டிலே போட்டுடணும்.''

'' ஓஹோ !''

''அவசரத்துக்கு இந்தப் பணத்தை எடுக் கக் கூடாது. பழைய அக்கௌண்ட்லே இருந்துதான் எடுக்கணும்.''

''ரொம்ப நல்லது.''

''என் சம்பளப் பணத்தை யெல்லாம் சேர்த்து வைத்து ஆறு மாசத்துக்கு ஒரு தடவை நகை செய்து போட்டுக்கப் போகிறேன்.''

''என்ன வேணும்னாலும் செய்துக்கோ. எனக்கு ஆட்சேபணையே இல்லே.... !''

''ஆட்சேபணை ஏதாவது சொன்னால்லே தெரியும்.''

''அதுதான் இல்லேன்னு சொல்லிட் டேனே !''

அதற்குப் பிறகு படம் ஆரம்பமாகி முடி யும் வரை புனிதம் ஒன்றுமே பேசவில்லை. மறு நாள் இருவரும் பாங்கிக்குப் போய்ப் புனிதத் தின் பெயரில் ஒரு புதுக் கணக்கு ஆரம்பித்து விட்டுத்தான் அலுவலகம் போனார்கள்.

முப்பது நாட்கள் ஓடி மறைந்து அடுத்த மாதம் முதல் தேதியும் வந்தது. ஊதியத் தொகையை வாங்கிக் கொண்டு வந்து அமர்ந்த புனிதத்திடம் இரண்டு பெண்கள் வந்தார்கள்.

''புனிதம்! பத்துப் பேர் சேர்ந்து ஐந்நூறு ரூபாய் சீட்டு ஒன்று ஆரம்பிக்கலாம்னு இருக்கோம். பத்து மாசத்துக்கு ஆளுக்கு ஐம்பது ரூபாய் போடணும். நீயும் சேர்ந்துக் கிறியா ?''

''ஓ ! தாராளமா....'' என்று கூறிய புனிதம் பர்ஸைத் திறந்தாள்.

''பணத்துக்கு ஒன்றும் அவசரமில்லே. உங்க வீட்டுக்காரரைக் கேட்டுக்கிட்டு....!''

''நோ...நோ...என் பணத்தைக் கொடுக் கிறதுக்கு அவரை என்ன கேக்கிறது? அவ ரிடம் கேட்டால் வேண்டாம்னு சொன்னா லும் சொல்வார்!'' என்று கூறிய புனிதம் ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து நீட்டினாள். அதை அவர்கள் வாங்கிக் கொண்டு போனபின் மீதமிருந்த பணத்தை மறுபடியும் எண்ணிப் பார்த்துக் கொண்டாள் புனிதம்.

சாரங்கன் ஐந்தேகால் மணிக்கு வந்து புனிதத்தை அழைத்துக் கொண்டு போனான். இடையில் எங்கும் போகாமல் அவர்கள் நேரே வீட்டுக்கு வந்தார்கள். வந்ததும்

முதல் வேலையாகச் சாரங்கன் தன் ஊதியப் பணத்தைப் புனிதத்திடம் கொடுத்தான். அதை அவள் எண்ணிப் பார்க்கத் தொடங்கிய பொழுது —

''புனிதம்! எங்க ஆபீசிலே சுந்தரம் இருக்கார்லே. போன மாதம் அவருக்குக் காலேஜ் அட்மிஷனுக்காக நிறையச் செலவாம். இருநூறு ரூபாய் கடன் கேட்டார். பத்தாம் தேதி வாக்கிலே சொஸைட்டியிலே 'லோன்' போட்டு...''

என்னுவதை நிறுத்திவிட்டாள் புனிதம். ''இப்ப இருநூறு ரூபாய் கொடுத்துட்டு வந்துட்டேன்னு சொல்றீங்களாக்கும்''—அவள் குரலில் கண்டிப்புத் தெரிந்தது.

''இல்லே — இல்லே... உன்னிடம் ஒரு வார்த்தை கேட்டுட்டுத் தர்றேன்னு சொன்னேன்.''

''ஒண்ணும் வேணும். இந்த மாதம் நமக்கு நிறையச் செலவு இருக்கு. ஏதோ நிலம் வாங்கறதுக்காக அட்வான்ஸ் தரணும்ன்னு சொன்னீங்களே !''

''அவர்தான் பத்தாம் தேதி கொடுத்திடறேன்னு சொல்றாரே !''

''வாங்கும் போது எல்லாரும் அப்படித்தான் சொல்வாங்க. அப்புறம் இழுத்தடிப்பாங்க.''

''அவர் அந்த மாதிரி இல்லே புனிதம். சொன்னால் சொன்னபடி திருப்பிக் கொடுத்து விடுவார்.''

''முடியாதுன்னு முடியாதுங்க'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறிய புனிதம், ''இப்ப இதிலே எவ்வளவு இருக்கு?'' என்று கேட்டாள்.

''சம்பளப் பணம் மொத்தமும் அப்படியே இருக்கு.''

அதைத் தனியாகவும், தன் பணத்தைத் தனியாகவும் வைத்துப் பீரோவைப் பூட்டிய புனிதம் வீட்டு வேலைகளைக் கவனிக்கப் போய் விட்டாள். முகத்தில் வேதனையும், ஏமாற்றமும் படர அமர்ந்து விட்டான் சாரங்கன்.

வாரங்கள் சில ஓடி மறைந்தன. ஒரு நாள் இரவு நேரம்.

''நாளைக்கு ஆபீசுக்குப் போறதுக்கு முந்தி பாங்குக்குப் போகணும்'' என்று ஆரம்பித்தாள் புனிதம்.

''ஏன் ?''

''எங்க ஆபீசிலே சரளான்னு ஒரு பெண் வேலை செய்யுது. ஏதோ அவசரமான செலவாம் அவளுக்கு. நூறு ரூபாய் கடன் கேட்டாள். பாங்கிலே எடுத்துக் கொண்டு போக வேண்டும்.''

சாரங்கனுக்குக் கோபம் வந்து விட்டது. ஆனாலும் அதை அடக்கிக் கொண்டு, ''அப்படியென்ன அவசரமான செலவாம்?'' என்று கேட்டான்.

''சரிதான். இதையெல்லாம் யாராவது கேட்பார்களா ? அவரவர்களுக்கு ஆயிரம் செலவு இருக்கும்?''

''கொடுக்கிறேன்னு சொல்லிட்டு வந்துட்டியில்லே.....?''



''ஆமாம். என் பணத்திலேயிருந்து எடுத்துக்கறேன்.''

சாரங்கன் பதில் பேசவில்லை.

''என்ன பேசாமல் இருக்கீங்க ? உங்க நண்பர் சுந்தரம் கேட்ட பொழுது கொடுக்கவில்லையேன்னு கோபமா?''

''எனக்கென்ன கோபம்? நீ உன் பணத்தைத்தானே கொடுக்கப் போகிறாய்? ஆனால் என் பணம்னு ஒண்ணு தனியா இல்லையே !''

புனிதத்துக்குச் 'சுருக்'கென்று நெஞ்சில் தைத்தது.

''என்ன பேசுறீங்க நீங்க ?'' என்று கேட்டபடியே படுத்திருந்தவள் எழுந்து உட்கார்ந்து விட்டாள்.''

''இல்லே.... சொன்னேன்.''

''என்னத்தைச் சொன்னேன்?''

''சரி... சரி... நான் தெரியாமல் ஏதோ சொல்லிவிட்டேன். வருத்தப்பட வேண்டாம்.''

''ஆமா.... சொல்றதையும் சொல்லிட்டு சமாதானம் செய்யுங்க. இப்ப அவளுக்கு நூறு ரூபாய் கொடுத்தால் என்ன குறைந்து விடும் ? நீங்க மட்டும் உங்க ஆபீஸ்லே யாருக்கும் கடன் கொடுத்ததில்லையா ?''

''கொடுத்திருக்கேன். ஆனால் உன் மாதிரி கேட்டவுடனே தர்றேன்னு சொல்லி வாக்குறுதி கொடுத்திட்டு வரலியே. அப்பொழுதும் உன்னிடம் கேட்டு விட்டுத்தானே கொண்டு போய்க் கொடுத்திருக்கிறேன்'' என்று பந்தைத் திருப்பினான் சாரங்கன்.

ஒரு சச்சரவு வருவதற்கான அறிகுறி அவன் பேசிய வேகத்தில் தெரிந்தது.

''சரி.... பேச்சை விடுங்க. அவகிட்டே இல்லேன்னு சொல்லி விடுகிறேன். எங்க வீட்டுக்காரர் இப்பக் கொடுக்கிறதுக்கு வசதியில்லேன்னு சொல்லிட்டார்ன்னு....''

''நல்லா இருக்கு. பேசுவது? அந்தப் பெண் என்னைப் பற்றி என்ன நினைக்கும் ? நான் கொடுக்க வேண்டாமென்று சொல்கிறேன் ?''

''பிறகு நீங்க பேசறது எப்படி இருக்காம்?''

''அப்படியே இருந்தால் அதை அந்தப் பெண்ணிடமா சொல்வது ?''

''ஏன்? நீங்க மட்டும் உங்க நண்பரிட்டே என்ன சொன்னீங்களாம்? என் மனைவி கொடுக்க வேண்டாம்னு சொன்னதாகத் தானே சொல்லியிருப்பீங்க....?''

''ஹூம். என்னைப் பற்றி நீ புரிந்து கொண்டது அவ்வளவுதான். அவருக்கு நான் இருநூறு ரூபாய் கொடுத்தேன்.''

புனிதம் திகைத்துப் போனாள்.

''இருநூறு ரூபாய் கொடுத்தீர்களா ?..... உங்களிடம் பணம் ஏது ?''

''நான் ஒருவரிடம் கடன் வாங்கிக் கொடுத்தேன். அதை அவர் சொன்ன மாதிரி திருப்பிக் கொடுத்து விட்டார்.''

இதைக் கேட்டதும் புனிதத்தின் உள்ளத்தை ஏதோ ஒன்று அறுப்பது போல் இருந்தது. சாரங்கனையே வைத்த கண் வாங்காது வெறித்துப் பார்த்தாள்.

''ஏன் அப்படிப் பார்க்கிறே ? நீ வேலை செய்து சம்பாதித்த உன் பணமோ — அல்லது நான் சம்பாதித்த நம் பணமோ — அல்லது வேறொருத்தர் பணமோ — அவருக்குத் தேவை இருநூறு ரூபாய். அந்தத் தேவைக்கு நான் உதவி செய்தேன்.''

''இதை ஏன் என்னிடம் சொல்லவில்லே?''

''சொன்னால் கோபிப்பேன்னு தெரியும்,''

''நீங்க கடன் வாங்கறதுக்கு நான் ஏன் கோபிக்கணும்? திருப்பிக் கொடுக்க வேண் டியது உங்கபாடு......''

''அந்தத் தைரியத்திலேதான் கடன் வாங் கினேனே தவிர, ஏதோ உன் சம்பாத்தியத்தி லிருந்து எடுத்துக் கொடுத்திடலாம்னு நினைக்கலே.''

புனிதத்தின் நெஞ்சில் அம்பு போல் சென்று பாய்ந்தன அந்த வார்த்தைகள்.

''ஏன் இப்படி வக்கரிச்சிப் போய்ப் பேச றீங்க? உன் சம்பாத்தியம் — என் சம்பாத் தியம்னு ?''

''நான் ஒன்றும் புதுசா சொல்ல வில்லையே.... இத்தனை நாளும் — ஏன் சில விநாடிகளுக்கு முந்திகூட நீ சொன்னதுதான் அது. இரண்டு வருஷமாக நான் வேலைக்குப் போகிறேன். ஒரு நாளாவது 'என் பணம்'னு நான் சொன்னதுண்டா ? அல்லது எந்த ஒரு காரியத்துக்கும் உன் அனுமதி இல்லாமல் வாக்குறுதி கொடுத்ததுண்டா ? நீயும் என் னைப் போல் இருந்தவள்தான். ஆனால் வேலைக்குப் போய்ச் சம்பாதிக்க ஆரம்பித்த வுடன்.....'' தொடர்ந்து சொல்லி முடிக் காமல் அவன் மௌனமாகி விட்டான்.

புனிதத்தின் நெஞ்சில் ஒரு வேத புத்தகம் விரிந்து விளக்கம் சொல்வது போல் இருந் தது. கணவன் சொல்வதுதான் எத்தனை உண்மை ! தான் வேலைக்குப் போவதற்கு முன்பு அவரது ஒவ்வொரு சொல்லையும் கட்டளையாகவும், வேத வாக்காகவும் நினைத் துக் கொண்டு அதற்குக் கீழ்ப்படிந்த தன் மனம், வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கத் தொடங்கியதும் ஏன் அவரது வார்த்தைகளை மீறுகின்றன? ஒரு வேளை கணவனைப் போல் தானும் சம்பாதிப்பதாக ஓர் எண்ணமா ? அந்த எண்ணத்தின் அடிப்படையில் உருவான அகம்பாவமா? பொழுதுபோக்காகத்தான் வேலைக்குப் போனேன் என்றாலும், அந்த வேலை 'உன்னாலும் சம்பாதிக்க முடியும்' என்ற அகம்பாவத்தைக் கொடுத்து, முடிவில், உன் கணவரைப் போல் நீயும் சக்தி படைத்தவள் என்ற மனோபாவத்தை வளர்த்து விட்டதா? கணவனுக்குச் சமமாக நாம் நம்மை நினைத் துக் கொண்டு விட்டோமோ? ஆயிரம்தான் ஆனாலும், சிவத்துக்குக் கட்டுப்பட்டதுதான் சக்தி என்பதையும், நாம் சிவத்துக்குச் சமம் என்று சக்தி நினைத்தால் அதனால் அனர்த் தம்தான் விளையும் என்பதையும் மறந்து விட்டோமா?

செய்யத் தகாத ஒரு தவற்றைச் செய்து விட்டுக் கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டபின் மன்னிப்புக்காக அழுவதைப் போல் அவளுடைய கண்களில் கண்ணீர் திரண்டு நின்றது. அதைப் பார்த்ததும் சாரங்கன் பதறிப் போனான்.

''என்ன புனிதம்? ஏன் அழறே ?'' என்று கேட்டபடி அவளை இழுத்து அணைத்துக் கொண்டான்.

'' என்னை மன்னிச்சிடுங்க..... உங்களுக் குச் சமமாக என்னை நான் நினைச்சுக்கிட்டு இந்த இரண்டு மூன்று மாதங்களிலே எப்படி எப்படி யெல்லாமோ நடந்துகிட்டேன் '' என்று சொல்லியபடி விக்கி விக்கி அழுதாள் புனிதம்.

''அழாதே, புனிதம். மனைவி, கணவனுக் குச் சமமானவள்தான். ஆனால் அந்த எண்ணம் கணவனிடம்தான் இருக்க வேண் டுமே தவிர, மனைவிக்கு வரக் கூடாது. வேலையிலே இருக்கிற சில பெண்களிடம் அந்த கைய எண்ணம் இருக்கிறதாலே, அவர்கள் தங்கள் கணவன்மார்களிடம் எப்படி நடந் துக்கறாங்கன்னு எனக்கு நல்லாத் தெரியும். அதனாலேதான் நீ வேலைக்குப் போறதை நான் விரும்பாமல் இருந்தது. எங்கே நீயும் அந்த மாதிரி நினைத்துக் கொண்டு விடு வாயோ என்ற பயம்தான். அந்தப் பயத் துக்கு ஏற்பவே நீயும் நடக்க ஆரம்பிக்கிற தைப் பார்த்து நான் பட்ட வேதனைக்கு ஓர் அளவு இல்லே. ஆனால் அதையெல்லாம் மனசிலேயே அடக்கி வைத்துக் கொண்டு...'' துயரத்தால் வார்த்தைகள் அடைபட்டன.

''அத்தான்.... அத்தான்... இனிமேல் நான் வேலைக்குப் போகலே. எனக்கு வேலை வேண்டாம்'' என்று தொடர்ந்து விக்கினாள் புனிதம்.

''பைத்தியம் ! இனிமேல் தாராளமாக நீ வேலைக்குப் போகலாம். ஏன்னா, இப்பொழுது அந்தப் பயம் எனக்கு இல்லே. அடிப்படை யான விஷயத்தை நீ புரிஞ்சுகிட்டே. அதனால் தாராளமா வேலைக்குப் போகலாம். கு ழ ந் தை க ள் பள்ளிக்கூடத்துக்குத்தான் போறதுன்னாலும், மழை வரும் போல் தெரிந் தால் பெற்றோர்கள் வேண்டாம்னு சொல்லு வாங்க. ஆனால் மேகமெல்லாம் கலைந்து மழை வராது என்று ஆகிவிட்டால் பள்ளிக் கூடத்துக்குப் போகச் சொல்லித் துரத்து வாங்க. அது மாதிரிதான் நானும்....'' என்று சொல்லியபடி புனிதத்தை அன்போடு வருடிய சாரங்கனின் கண்களும் கலங்கின.

கண்ணீரில்தான் இரண்டுவிதம் இருக்கிறதே.




காப்பு

வாக்கொன்றையே கொண்டு வக்கில்லாப் பாவலர்க்குப்
போக் கொன்றைக் காட்டப் புறப்பட்டேன்;- மேற்கொண்டு
வந்தது பாட வடபழநி ஆண்டவனே,
தந்தது காப்பிங்கு தான்!

படை

ஏண்டா கவிராயா, இப்படி நாள் ஓட்டுகிறாய்?
போண்டா சாம்பாருக்குப் போக்குண்டா? - வேண்டாம்;
ஒரு ஸ்டாரின் பின்னேயே ஊர் சுற்றின் போதும்;
பெரும் ஸ்டாரும் நீயே பிறகு!

சங்கீதம் தேவையில்லை; சந்தமேதும் தேவையில்லை;
இங்கிதமே தேவை இதற்கெல்லாம்! - அங்கிதுபோல்
வெற்றிலையும் சீவலையும் வேணா அரைத்து விட்டுப்
பற்றில்லை போலப் பழகு!

இலக்கணமாய்ப் பாடல் எழுதாதே; எல்லாம்
விலக்கணுமாம் அங்கே வெடிபோல் - கலக்கவே
டப்பாவால் தாளம்; டமாரம் போல் பேக்ரவுண்டாம்!
தப்பான பாட்டே தரம்!

கிறுக்களன்ன வேண்டிக் கிடக்கு? பழம் பாடல்
நறுக்கென்ன உண்டே, நமக்கு? - பொறுக்கி
அவையாவும் கோத்தால், அது ஓர் படத்தின்
சுவையான பாட்டாமே, சொல்லு!

காப்பியடித் துப்பாடல் கச்சிதமாய்த் தீட்டுமுன்று, டீ
காப்பி அடிக்கடியும் கைக்கு வரும்! - ஆப்பிள் ஜூஸ்
கூடவரும் கேட்டால் குடிப்பதற்கும் டின்டின்னாய்
ஓடிவரும் சிகரெட் உண்டு!



பாப்பாட வேண்டாம். பல வாய் பிடில் வினை
கூப்பாடுக்கே சொல் கொடு; போதும்! - சாப்பாடும்
ஓட்டல் புகாரிக்(கு) உடனேயே ஆர்டர் பண்ணிக்
கேட்டல்லவோ, வரும் பால் கீர்!

அப்பால் தான் பாரேன், அருங் கவர்ச்சிப் போஸ்டரெலாம்
தப்பாமல் நின் பேரும் தாங்கி வரும்! - மெப்பாய்க்
கவியரசே நீ என்றும் கம்பனே நீ என்றும்
செவியறைந்து பேசுவார் சேர்ந்து!

கம்பன் தறியும் கவிபாடும் என்பது போல்
அன்பன் நின் சுற்றும் அருள் பாடும்! - நின்பதிலைப்
பேட்டி கண்ட கட்டுரையாய்ப் பேப்பரிலும் போடுவார்,
போட்டிகொண்டு ஸ்டில்களுமே போட்டு!

பெங்களூர், ஊட்டி பிறகும் தான் பாண்டி என்று
திங்களொரு ஊராய்த் திரியலாம்; - அங்கங்கோர்
ஓட்டலிலே ரூமாய் உதிக்காத 'மூடும்' தான்
'பாட்டில்' வருகை தரும் பார்!

நிறையப் படம் வேண்டாம்; நேர ஒன்றி ரண்டு
வர இருந்தால் போதும். வகையாய்த் – திரை மறைவில்
சொந்தப் படத்திற்கும் சும்மாத் துணியலாம்.
வந்து புரொட் யூசராகும் வாய்ப்பு!

அல்டாப் எவர்க்குண்டோ, அன்னவரே இவ்வுலகில்
புல்டாப் என வரலாம்; போதித்தேன்! - டெல்டாப் போல்
வாழ்வின் முனை நின்று வாடுவதால் லாபமென்ன?
ஊழ்வினையைப் பேத்தாமல் ஒடு!

டெர்லின் நைலஸ் சிலாக்கும் டிப்டாப்பாய்ப் புல் பேண்டும்
கர்லிங் ஹேர் பங்களா கார் வெயிட்டும் - ஸ்டர்லிங் போல்
பாங்கிருப்பும் நாலு படச்சான்சும் உள்ளவரே
ஈங்கிருக்கலாம், கவிஞர் என்று!

சோற்றுப் படைக்காகச் சோர்வு கொள்ளும் பாவலனே,
ஆற்றுப் படையுனக்கே ஆக்கி விட்டேன்! - ஏற்றுப்
படை எடுப்பாய் இன்றே படவுலக ஸ்டாரின்
கடைஎடுப்பாம் பார்வை பெறக் காத்து!





ராதா,

இந்த நேரத்தில் உனக்கு இந்தக் கடிதம் அனுப்புவதைப் பற்றித் தயவு செய்து மன்னிக்க வேண்டும். உன் மனத்தைத் துன்புறுத்துவதற்காக எழுதவில்லை; அல்லது நமக்குள் நிலவிய அந்தரங்க உறவை எப்படியாவது பலர் அறியச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதியிருக்கிறேன் என்றும் நீ எண்ணத் தேவையில்லை. எப்படியாவது உன்னைப் பழிவாங்க வேண்டும் என்று வன்மம்கொண்டு அதற்கான வழி வகைகள் தேடிக் கொண்டிருப்பேன் என்றும் எண்ண வேண்டாம். அந்த மாதிரி எண்ணம் எனக்கு எதுவும் இல்லை: இது முக்காலும் உண்மை. ஆகவே உன் மனத்தில் அப்படிப்பட்ட அச்சமோ அல்லது சஞ்சலமோ உலாவி உன்னைத் துன்புறுத்த வேண்டாம். என் உயிரின் மேலும் நேர்மையின் மேலும் இறைவன் சாட்சியாகச் சொல்கிறேன்: நீ நிம்மதியாக வாழ வேண்டும் அந்த நிம்மதியை உனக்குக் கல்யாணப் பரிசாகக் கொடுக்கிறேன். ஏற்றுக்கொள்.

உன்னை மணந்து, எனக்குள்ள வசதிகளைக் கொண்டு உன்னை என் மனைக்கு அரசியாக நடத்தி என் இதயத்தில் வைத்துப் போற்ற வேண்டும் என்று எண்ணி எண்ணி ஏங்கித் தனித்த நாட்கள் உண்டு. அந்த நினைவுகள் எல்லாம் நனவுகளாக மலராமல் கனவுகளாகவே போய்விட்டனவே! ஆனால், உன்னையும் கடந்த ஒரு மாத காலமாக நம் பெரியவர்களிடையே நடந்த அருவருக்கத் தக்க பேச்சுக்களையும் மறக்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். இதோ நானே நான் ரயிலிலோ அல்லது பஸ்ஸிலோ ஏறி ஊரை விட்டே போகப் போகிறேன்.' ஆகையால்

# உனக்குத் தெரியும் ராதா!

"செந்தில் வேள்"



உன் மீது எந்த விதமான குரோதமும் பாராட்டாமல் உன்னை மனப்பூர்வமாக மன்னித்து விட்டேன் என்று எண்ணிக் கொள்.

'நீ யார் என்னை மன்னிப்பதற்கு?' என்ற கேள்வியை நீ விடுக்கலாம். அதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. என் உள்ளத்தில் இருப்பது உன்மீது பச்சாதாபந்தான்; வெறுப்பு இல்லை. கொஞ்ச நாட்களாவது என் இதயத்தில் வீற்றிருந்து எனக்கு இன்பக் கதைகள் கூறியவள் அல்லவா நீ! அதற்கு நன்றியாக உன்மீது எவ்வித வெறுப்பும் கொள்ளாமல் இருக்கிறேன் என்பதை நீ உணர வேண்டும் என்ற அற்ப ஆசை; அவ்வளவே. அது உள்ளத்தோடு மட்டும் இருந்தால் போதாதா? இப்படிக் கடிதத்தில் கொட்டித்தான் தீர வேண்டுமா என்று எள்ளி நகைத்து ஏளனம் செய்யலாம். உன்னிடம், நீ செய்த அடாத செயல்களைச் சொல்லித் தீர்க்க வேண்டும் என்ற ஆசையும் கூடத்தான். தயவு செய்து மன்னித்துக் கொள். இந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு எரித்துவிடு; என் உள்ளத்தில் உன்மீது உண்டான கோபதாப வெறுப்பு உணர்ச்சிகளை எல்லாம் நான் எரித்துவிட்டதைப் போல.

கடந்த ஒரு வாரமாக நம்முடைய பெற்றோர்களும் பெரியோர்களும் பேசிய விவகாரத்தில் நான்தான் குற்றவாளி என்ற முறையில் தகராறைத் தீர்த்துவிட்டார்கள் என்று ஒரு வழியாக உணருகிறேன். இப்படி அவர்கள் ஒரு முடிவுக்கு வருவதற்கு உன்னுடைய அரை குறைப் பேச்சும் மௌனமும் உதவி செய்திருக்கின்றன. மிக்க மகிழ்ச்சி. ஒழுக்கம் நிறைந்த உத்தமக் குலத்தில் பிறந்த குலக்கொடி நீ; நீ தவறு எதுவும் செய்யவில்லை. செய்திருக்கவும் முடியாது. உன் அடக்கமும் ஒடுக்கமும் இந்த ஊரில் உள்ள வேறு எந்தப் பெண்ணுக்கும் வராது. ஆகையால் அசம்பாவிதமாக நடந்து கொண்டது நான்தான் என்று பெரியவர்கள் முடிவு செய்து 'மேலும், இந்தப் பூசலே வளர்க்க வேண்டாம்; இப்படியே விட்டுவிடுவது நல்லது' என்ற முறையில் விவகாரத்தை முடித்துக் கொண்டார்கள். ஆக அவர்கள் முன்னிலையில் நான் குற்றவாளி. ஏதும் அறியாத என் தந்தை எனக்காக இந்த அவமானத்தைத் தாங்கிக் கொண்டு உள்ளுக்குள் வைத்துப் புழுங்கிக் கொண்டிருக்கிறார்கள். நானோ தலையைத் தொங்க விட்டுக் கொண்டு அடிபட்ட மிருகம் போல இதோ இந்த அறையில் அங்கு மிங்கும் உலவிக் கொண்டு உண்ணாமல் உறங்காமல் தவித்துக் கடைசியில் இந்த ஊரை விட்டே ஓடிவிடத் தீர்மானித்து விட்டேன். உன்னை அடைந்து உன்னோடு இன்ப வாழ்க்கை நடத்தி இந்த ஊரில் நல்லவனாக நான்கு பேருக்கு உபகாரியாக வாழ வேண்டும் என்ற எண்ணத்தை நான் கொண்டிருந்தது குற்றமானால், நான் குற்றவாளிதான்.

ஆனால் உன் உள்ளத்துக்குத் தெரியும் ராதா, நான் குற்றவாளியா? இல்லை, அதைக் கொஞ்சம் மாற்றி, உன்னிடத்தில் கேட்கிறேன், நான்மட்டும்தான் குற்றவாளியா? நீயே, உனக்கே உன் மனச்சாட்சிக்கே பதில் சொல்லிக் கொள்.

இதை எல்லாம் இப்போது நான் ஏன் கிளறிக் கொண்டிருக்கிறேன் என்று உனக்குக் கோபம் வரலாம். இந்தக் கடிதத்தைப் படித்துவிட்டுத் தீயிலிட்டுப் பொசுக்கும்வரை தயவுசெய்து அதைப் பொறுத்துக் கொள். என் உள்ளத்தைத் திறந்து காட்டும் கடைசி முயற்சி இது. அவ்வளவுதான். இதற்குப் பின் நீ என்னை எட்டி நின்று பார்க்கப் போவது மில்லை, கேள்விப்படப் போவது மில்லை. நான் எங்கு இருக்கிறேன் என்பது கூட உனக்கு நிச்சயம் தெரியப்போவதில்லை.

நான் குற்றவாளி இல்லை, ராதா. அப்படியே நடுநிலையில் நின்று யாராவது இதை ஆராய்ந்து முடிவு கட்டும் பட்சத்தில் ராதா, உனக்குத் தெரியும் முடிவு எப்படி இருக்கும் என்று. சிந்தித்துப் பார். நீதான் குற்றவாளி. முகத்தைச் சுளிக்காதே. வெளியில் நான் சொல்லவில்லை. உன்னிடம்தானே சொல்கிறேன். உனக்கும் எனக்கும்தானே தெரியும் நம்மிடையே நடந்தவைகள்?

ராதா, உனக்கு ஞாபகம் இல்லை என்று உன் உள்ளத்தையே மறைக்கலாம். அன்று நீ தனியாகப் பூஜைத் தட்டுடன் கோயிலிலிருந்து வந்து கொண்டிருந்தவள், என்னைக் கண்டதும், பூத்தட்டை என்னிடம் நீட்டி 'திருநீறு எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னாயே, அதற்கு முன்னால் நீ என்னிடம் எப்போதாவது பேசியிருப்பாயா? பள்ளிக்கூடத்திலும் பின்பு காலேஜிலும் நீயும் நானும் குறுக்கும் நெடுக்குமாக எத்தனை தடவைகள் போயிருக்கிறோம். எப்போதாவது நான் உன்னை ஏறிட்டுப் பார்த்திருக்கிறேனா?

ஆனால் அன்று நீ எதிர்பாராதவிதமாய்ப் பூத்தட்டை என்னிடம் நீட்டியவுடன் நான் திடுக்குற்றதை நீ அறிவாய். வேறு வழியில்லாமல் திருநீற்றை எடுத்து நெற்றியில் பூசிக்கொண்டு குங்குமத்தை எடுப்பதற்குள் உன் வலது கை மோதிர விரலால் குங்குமத்தை எடுத்து என்னிடம் நீட்டி என்னை எடுத்துக் கொள்ளுமாறு சொன்னாயே? இது ஏன்? கோயிலில் யாராவது பார்த்தாலும் எவ்விதச் சந்தேகமும் கொள்ள முடியாத ஒரு சூழ்நிலையை உண்டாக்கிக் கொண்டு இறைவன் திருவருட் சந்நிதியிலேயே நீ இவ்வாறு செய்யத் துணிந்தாய். கோயில் பிரசாதத்தையே நீ ஆயுதமாய் உபயோகித்தாய்! கோபம் கொள்ளாதே, ராதா! முன் பின் பேசியறியாத என்னிடம் கோயில் பிரசாதம் வலிந்து தரவேண்டுமா? என்னை மடக்கி விட்டு வெற்றிப் புன்னகையோடு என்னை ஒரு பார்வை பார்த்துவிட்டுப் போய் விட்டாய். நான் நீ அளித்த திருநீற்றையும் குங்குமத்தையும் வாங்கிக் கொண்டது குற்றமானால் நான் குற்றவாளிதான்.

ராதா, உனக்குத் தெரியும், ஒரு பெண்ணிடம் இவ்வாறு நடப்பது சரியில்லை என்ற பயத்தின் காரணமாக நான் உன்னிடம் சரளமாகப் பழகவில்லை. ஆனால் ஒரு நாள் திடீரென்று இதோ இந்த அறையில் தோன்றினாயே, நானா அழைத்தேன்? அப்பொழுது நீ இறைக்க இறைக்கப் பெருமூச்சுடன் முகத்தில் சிறு வியர்வை அரும்ப என் எதிரில் வந்து நின்றபோது நான் மகிழ்ச்சியுற்றேனா? 'ஏன் வந்தாய்? என்ன வேண்டும்?' என்று தானே கேட்டேன். நல்லவேளை. என் பெற்றோர்கள் ஊரில் இல்லை. அயலூருக்கு ஒரு கல்யாணத்துக்குப் போயிருந்தார்கள். அது உனக்குத் தெரியாது என்றாய்? ஆனால் வேலைக்காரி காமுவின் மூலம் அறிந்துதான் வந்தாய். உன் மனம் நோகுமே என்று நீ சொன்னதை எல்லாம் நம்புவதாக நான் பாவனை செய்தேன். கள்ளங்கபடு அறியாத என் தங்கை, 'ராதா அக்காவா!' என்று ஆச்சரியம் அடைந்து, எப்போது வந்தாள் என்று ஆச்சரியப்பட்டு நின்றபோது, நீ 'ஒரு பாட்டுக்கு அர்த்தம் தெரிய வேண்டும்' என்று என் பி. ஏ. தமிழ்ப் புத்தகத்தை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டாய். பின்பு, அவளிடம் 'நீ ஓடிப் போய் காப்பி கொண்டு வா' என்று நீ சொன்னதும் என் தங்கை போய் விட்டாள். பின்பு அந்தப் பாட்டுக்கு அர்த்தம் கேட்டாய். எந்தப் பாட்டு என்று ஞாபகம் வருகிறதா?

ஆனால் அந்த அகப்பாட்டுக்கு-உண்மையில் அர்த்தம் சொன்னது நீயா, நானா? உனக்கு இவ்வளவு தமிழ்ப் புலமை இருக்கிறதா என்று நான் எவ்வளவு ஆச்சரியம் அடைந்தேன். உன் பெண்மை நலத்துக்கு எவ்வித மாசும் ஏற்பட்டு இந்தப் பொல்லாத உலகம் அதன் மீது ஏதாவது குற்றம் சுமத்தி விடக்கூடாதே என்று நான் எவ்வளவு அஞ்சினேன் என்பது உனக்கு, உன் உள்ளத்துக்குத் தெரியும் ராதா.

உன்னுடைய தமிழ்ப் புலமையும், பேச்சு நளினமும் ஒளி மிகுந்த கண்களும் என் உள்ளத்தில் நிலவி இரவு, பகல் உன்னை மறக்க முடியாமல் மீண்டும் உன்னை எப்பொழுது காண்பேன், உன் செஞ்சொற்களை எப்போது கேட்பேன் என்றெல்லாம் ஏங்கி ஏங்கி நைந்ததுண்டு. ஆனால் என்ன மாயம்! பெண்ணைப் பற்றி — பெண்ணுரு வந்ததொரு மாயப் பிசாசம் என்று சொன்னது எவ்வளவு உண்மை! நீர்க் குமிழி போல் தோன்றி மறையும் உன் சொற்களையும் செயல்களையும் உண்மையில் ஊறி உள்ளவரை நிலைத்துநின்று என் உயிர்க்கும் உள்ளத்துக்கும் உறுதி பயக்கும் என்றெல்லாம் எண்ணி மயங்கிய என் பேதைமையை என்னவென்று இயம்புவது! வலிய வந்து என்னிடம் மாயப் பொய் நீ கட்டியதை உண்மை என்று நான் நம்பியது குற்றமானால் நான் பெரும் குற்றவாளியே.

உன் சுயநலத்துக்காக, உன் உள்ளத்தில் தோன்றிய ஆசைகளைச் சமாதானம் செய்து கொள்வதற்காக அடக்கம், ஒடுக்கம், அச்சம், நாணம், மடம் என்றெல்லாம் பண்பாடு என்ற பெயரால் செய்து வைத்திருப்பதைக் கவசங்களாகக் கொண்டு ஒன்றும் அறியாதவள் போல் நீ செய்த திருவிளையாடல்களை இந்த ஊரும் உலகமும் அறியச் செய்ய வேண்டும் என்று நான் நினைத்தால் ஒரே நொடியில் நான் செய்ய முடியும். ஆனால் அப்படிப்பட்ட கீழ் மகனாக நான் ஒருநாளும் ஆகமாட்டேன்.

எனக்கு நீ அனுப்பிய கடிதங்களெல்லாம் நான் வணங்கும் முருகப் பெருமான் படத்துக்கு அடியில் வைத்திருக்கிறேன். முத்துக் கோத்தது போல அழகொழுகும் செஞ்சொற்களால் நீ புனைந்த கடிதங்களை விலைமதிக்க முடியாத பொக்கிஷம் என்று எண்ணி மயங்கிய நான் தெய்வ சன்னிதியில் நிவேதனம் செய்வதைப் போன்று முருகப் பெருமான் பாதங்களில் மறைத்து வைத்திருக்கிறேன். பவித்திரமான மலர்களைத் தூவ வேண்டிய இடத்தில் வஞ்சகத்தையும் மாயத்தையும் பிரதிபலிக்கும் உன் கடிதங்களைக் கொண்டு போய் வைத்திருக்கிறேன். அந்தப் பேதைமையை என்னவென்று சொல்வது! இப்படிப்பட்ட பாதகச் செயலைச் செய்த நான் குற்றவாளி அல்லாமல் வேறென்ன?

இந்தக் கடிதங்களைக் கொண்டு வஞ்சம் தீர்க்க வேண்டும் என்று நான் எண்ணியிருந்தால் என்னால் ஆகாதா? ஊரார் அறியச் செய்யா விட்டாலும் உன் தந்தைக்கு உண்மை இன்னதுதான் என்று உணரும்படிச் செய்ய இந்தக் கடிதங்களை அனுப்பி உன்னையும் ஓரளவாவது பழிவாங்கி இருக்க முடியும்.

ஆனால் ஒரு கணமாவது என் உள்ளத்தில் நின்று உன் நினைவுகளால் என்னை மெய் மறக்கச் செய்தவள் நீ. அதற்காக அந்தக் கடிதங்களில் ஒன்றுகூட விடாமல் அவைகளை இத்துடன் அனுப்பி யிருக்கிறேன்.

காதலோ, காதலிப்பதோ குற்றமில்லைதான்; பிறருக்கு எந்த விதமான கெடுதலும் இல்லாதிருந்தால். ஆனால் நீ என்மீது வலிந்து செலுத்திய அன்பு என்னை இப்போது பெரும் நரக வேதனைக்கு உள்ளாக்கி யிருக்கிறது என்பதை நீ உணர வேண்டும் என்பதற்காகவே இத்தனை நீண்ட கடிதம் எழுதி விட்டேன்.

நான் செய்த குற்றத்தை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அது உன் அறி

# கால்கேட் மூலம், வாய்-நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!






ஏனெனில்:
ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் வாய்நாற்றத்தையும் பற்சிதைவை விளைவிக்கும் கிருமிகளையும் 85 சதவிகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10 க்கு 7 பேர்களின் வாய்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும், உணவு உட்கொண்ட உடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன! இந்த நிரூபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே!
அதன் வியக்கவைக்கும் பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல்க்ரீம் கொண்டு குழந்தைகள் நாளும் பல் துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே... மற்றெந்தப் பற்பசையையும்விட உலகிலேயே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத்பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்!

DC.C.37 TM

# டாடாவிஷன்



டாடாவின் பெருநோக்கு. தீர்க்க தரிசனமுள்ள கருத்துக்கள் இருந்து என்ன? அவை மக்களிடையே பரவாவிட்டால் என்ன பயன்?— அவை மக்களைத் தறுதறு என்று செயல்படுத்த வேண்டாமா?

ஜாம்ஷெட்பூரில் நல்ல கருத்துக்கள் செயலாகாமல் வீணாவதில்லை. ஏற்ற உதவிகளும் சூழ்நிலையும் அங்கே உள்ளன. இத்தகைய ஒன்றே குடும்ப நலத்திட்டம்.

இந்தத் திட்டம் ஜாம்ஷெட்பூரில் தொடங்கிய மூன்று ஆண்டுகளுக்குள் 'விவாத-வட்டங்களில்' கலந்து கொள்வோர் தொகை பத்து மடங்காக உயர்ந்து விட்டது. விவாதத்தின் விளைவாக எழுந்த தெளிவான உறுதி: 1965-இல் ஜாம்ஷெட்பூரில் பிறப்புவிகிதம் குறையத் தொடங்கி விட்டது.

**டாடா எஃகு ஸ்தாபனத்தின் குடும்ப நலத் திட்டத்தினால் ஜாம்ஷெட்பூர் மக்களுக்கு என்ன பயன்?**

இரண்டு நவீன நகரத்துக் குடும்பத் திட்ட நிலையங்களும் ஆறு பிரசவ, குழந்தை பராமரிப்பு விடுதிகளும் இனாமாகக் குடும்பக்-கட்டுப்பாட்டு சாதனங்களை வழங்குகின்றன; ஆலோசனை கூறுகின்றன.

இரண்டு நகர நிலையங்களிலும் டாடா மெயின் ஆஸ்பத்திரியிலும் 'வாஸக்டமி' ஆபரேஷன் செய்யப்படுகிறது. அதைச் செய்து கொள்ளும் கம்பெனி ஊழியருக்கு ஆபரேஷன் செலவு இல்லை. அதோடு ரொக்கப் பரிசாக ரூ. 200/- தரப்படுகிறது. போனவருஷம் ஆகஸ்டு டிசம்பர் காலத்தில் 1650 பேர் ஆபரேஷன் செய்து கொண்டதில் வியப்பில்லை. கம்பெனி ஊழியரின் மனைவியர் 'டியூபெக்டமி' ஆபரேஷன் செய்து கொண்டாலோ, 'லூப்' பொருத்திக் கொண்டாலோ ஊக்கப்படுத்தும் வகையில் ரொக்கம் வழங்கப்படுகிறது.

**டாடா ஸ்டீல்**

TN 4426

விலும் அழகிலும் என் மனத்தைப் பறிகொடுத்துத் தேனில் விழுந்த ஈயைப்போல் மயங்கி, உன் அன்பை ஏற்றுக்கொண்டதுதான். அது பூரணமாக உனக்குத் தெரியும் ராதா.

ராஜகோபால்

ராஜகோபால் உணர்ச்சி வேகத்தில் எழுதிய இந்தக் கடிதத்தை எவ்வாறு ராதாவின் கையில் சேர்ப்பது என்று அறையில் அங்கும் இங்கும் உலாவிக் கொண்டு தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கையில் வேலைக்காரி காமு அங்கு தோன்றி அவசர அவசரமாக ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டு அவன் மறு பேச்சுப் பேசுவதற்கு முன் வேகமாகச் சென்று மறைந்தாள்.



"வாயைத் திற! கர்ச்சீபை வாயில் அடைக்கணும்."

"ஐய்ய! அதுலே மூக்குப்பொடி நெடி அடிக்குது! கடைக்குப் போய் புதுசா வாங்கிட்டு வா!"

அன்புமிக்க அத்தான்!

பெண்ணாய்ப் பிறந்தாலே சோதனைகள் ஏற்படத்தான் செய்யும்போலும். ஆனால் சோதனையில் வெற்றி அடையாவிட்டால் அதற்கு மாற்று மரணம் ஒன்றுதான். இல்லாவிடில் பெண்மை நலனுக்கு அணி ஏற்படாது. இந்தச் சோதனையில் தாங்கள் எப்படித்தான் சமாளிக்கப் போகிறீர்களோ; எனக்கு ஏற்பட்ட பெரும் கலக்கத்துக்கு இறுதியில் நல்ல வழியாகத் தீர்வு கிடைத்துவிட்டது. என் நிலையையும் உறுதியையும் என் தாயார் உணர்ந்து என் தந்தையை நம் திருமணத்துக்குச் சம்மதிக்கச் செய்து விட்டார். இதில் ஏதாவது என்னளவாவது குந்தகம் ஏற்பட்டாலும் நான் உயிர் தரியேன் என்பதை என் தாயார் உணர்ந்ததுதான் என் வெற்றிக்குக் காரணம்.

காதல் ஒருவனைக் கைப்பிடித்து - அவன்
காரியம் யாவினும் கைகொடுத்து
மாதர் அறங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச் செய்து வாழ்வமடி

என்ற பாரதி வாக்குப்படி நான் தங்களை மணந்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தது முதல் நம் திருமணம் எப்படி நிறைவேறுமோ என்ற ஓர் அச்சம் எப்படியோ என் உள்ளத்தில் ஏற்பட்டிருந்தது. இந்த அச்சம் ஏன் ஏற்பட வேண்டும் என்று எனக்கே தெரியவில்லை. ஆனால் நான் அஞ்சியதைப் போலவே அந்த நிலை எப்படியோ இறுதியில் வந்தேவிட்டது. எல்லாம் என் மூடத்தனத்திலும் உங்கள் எச்சரிக்கை இல்லாத்தனத்திலும்தான். காதலுக்குக் கண் இல்லை என்பார்களே, அதன்மீதுதான் பழி போட வேண்டும்.

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே உள

என்றெல்லாம் கற்று வைத்திருந்து என்ன பயன்? அன்று ஒரு நாள் காலையில் குளக்கரை அருகில் மருத மரத்தின் கீழ் காட்டு மல்லிகைப் புதர் மறைவில் யாரும் பார்க்கவில்லை என்று நானே கற்பித்துக் கொண்டு தங்களோடு நெடு நேரம் உரையாடிக் கொண்டிருந்தேனே, ஞாபகம் வருகிறதா அத்தான்? அந்தச் செயல்தான் இந்தப் புகைச்சலுக்கே மூலகாரணம். யாரோ என் தந்தையிடம் தாங்கள் என்னை யாரும் அறியா வண்ணம் கூட்டிக் கொண்டு இந்த ஊரை விட்டு ஓடிப்போகத் திட்டமிட்டிருக்கிறீர்கள் என்றும், எல்லாம் நான் அணிந்திருக்கும் நகைகள் மீதுதான் உங்கள் நாட்டம் என்றும், வத்தி வைத்திருக்கிறார்கள். என்ன கீழ்த்தரமான செயல்! என்னை மயக்கி என் மனத்தை என் வசம் இல்லாது நீங்கள் செய்திருக்கிறீர்கள் என்றெல்லாம் கோள் மூட்டி விருக்கிறார்கள். ஆகவே என்னைக் கண்காணிப்பது மிகவும் அவசியம் என்று எண்ணி அதற்காக எனக்குத் தெரியாமலேயே என்னைச் சுற்றி என் நடமாட்டங்களைக் கவனிக்கச் சிலரைக் காவல் வைத்திருக்கிறார்கள்.

சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை

என்னைக் காத்துக் கொள்ளும் திறன் எனக்கு உண்டு அத்தான். அந்த அறிவை யாரும் எனக்குச் சொல்லித் தரவேண்டிய அவசியம் இல்லை. நாளும் தெரிந்த என் தந்தைக்கு ஏன்தான் இப்படி ஓர் எண்ணம் ஏற்பட்டதோ? அவர் இப்படி நடந்துகொள்வார் என்று நான் கனவில் கூட நினைக்கவில்லை.

இந்த நிலையில் நான் அவசரப்பட்டுத் தங்களைச் சந்திக்க முற்படவில்லை. என்னுடைய ஆவலையெல்லாம் வெகு சிரமப்பட்டு அடக்கி கொண்டேன். இந்தச் சோதனையில் தாங்கள் வெற்றி பெறுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்குத் துணையாக இருந்தது. அவசரப்பட்டு நான் தங்களைச் சந்தித்திருக்கும் பட்சத்தில் அது ஒரு பெரும் தீயாக மூண்டாலும் மூண்டிருக்கும். என் தந்தை நேரக்கூடாத ஓர் அவமானம் நேர்ந்து விட்டதாக எண்ணித் துடித்துக் கொண்டிருந்தார். இது பெரிய கலகமாக மூண்டு தங்களுக்கு ஊறு ஏதாவது ஏற்பட்டு விடக் கூடாதே என்று நான் பட்ட துயரம் எழுதித் தீராது. அத்தான், நான் சரியாக உண்ணாமலும் உறங்காமலும் தவம் இருந்தேன்; தவக் கோலமே பூண்டிருந்தேன்; என் நகைகளை யெல்லாம் கழற்றி எறிந்து விட்டேன்.

என் நிலையைக் கண்ட பிறகுதான் அப்பாவின் நிலையில் ஒரு திடீர் மாற்றம். அதாவது என்மீது எவ்விதக் குற்றமும் இல்லை என்றும், எல்லாவற்றுக்கும் தாங்கள்தான் காரணம் என்றும் அப்பா முடிவு கட்டிவிட்டார். தங்களைத் தண்டிக்க வேண்டும் என்று எண்ணினார் என்பதும் உண்மைதான்.

அத்தான், எல்லாவற்றுக்கும் நான்தான் காரணம். நீங்கள் ஒரு பாவமும் அறிய மாட்டீர்கள். தவறு செய்ததெல்லாம் நான் தானே? தண்டிக்கப்பட வேண்டியவளுமே நான் அல்லவா?

## ஆராய்ச்சித் துணுக்கு!

'ஜோக்கா இது?' என்று படித்தவுடன் துணுக்குறச் செய்வதால் 'துணுக்கு' என்ற பெயர் வந்ததோ!

— சுதாகரன்

அத்தான், உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதோ இல்லையோ? ஆனால் அந்தச் சம்பவத்தை நான் என் உயிர் உள்ளவரை மறக்க முடியாது. கோயிலில் நிகழ்ந்த முதல் சந்திப்பைப் பற்றித்தான் சொல்கிறேன். அதற்கு முன் கலாசாலையில் என் முன்னே குறுக்கும் நெடுக்குமாக எத்தனையோ தடவை போயிருக்கிறீர்கள் என்பது உண்மைதான். ஆனால் கோவிலில், தெய்வ சன்னிதியில்தானே நாம் நேருக்கு நேராகச் சந்தித்தது. நீங்கள் எப்படி என் மனசுக்குள் புகுந்தீர்கள்! எனக்குக் காரணம் சொல்லத் தெரியவில்லை. எப்பொழுதும் மந்தகாசத்துடன் விளங்கும் உங்கள் முகமா? கோபமே வராத உங்கள் குணமா? ஒழுக்கமும் மரியாதையும் நிறைந்த உத்தம மாணவன் என்று ஆசிரியர் இடத்தும் நீங்கள் அடைந்த நற்சான்றா? எனக்கு எது என்று சொல்லத் தெரியவில்லை. என் மனம் என் வசத்தில் இல்லை. அது உங்கள் வசமே வந்துவிட்டது என்று அப்பா தூற்றினார்களே, அதில் உண்மை இல்லாமல் இல்லை, எப்படியோ என் மனம் உங்களிடம் வந்துவிட்டது. நீங்கள் என் மனத்தில் புகுந்த நாள் முதல் உங்களிடம் எப்படிப் பேசுவது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். உண்மையில் சொல்லுகிறேன். நீங்கள் கோவிலுக்குப் போவதை அறிந்துதான் நான் கோவிலுக்கு வந்தேன். திருநீறு, குங்குமம் எடுத்துக் கொள்ளுங்கள் என்று நான் திடுதிப்பென்று சொன்னபோது உங்களுக்கு ஏற்பட்ட அதிர்ச்சியை நினைத்து நினைத்து நான் தனிமையில் பைத்தியம் போலச் சிரித்து மகிழ்ந்திருக்கிறேன். ஆனால், அத்தான், நீங்கள் நான் விரலால் தொட்டு நீட்டிய குங்குமத்தை எடுத்துக் கொள்ளாமல் உதாசினப்படுத்திவிட்டுப் போயிருந்தீர்களோ என் உள்ளம் கண்ணாடி போலத் தூள் தூளாக நொறுங்கிப் போயிருக்கும்.

அப்புறம் உங்களைப் பார்க்கும்போதெல்லாம் அந்தக் கோயிலின் சந்திப்பும் நான் கொடுத்த குங்குமத்தை நீங்கள் ஒரு ஆட்டுக்குட்டியைப் போலக் குழைவாகப் பயபக்தியுடன் எடுத்துக் கொண்டதும் என் நினைவுக்கு வரும். உங்கள் இதழ்க்கடையில் தோன்றும் குறுநகை அதை எண்ணித்தான் என்று நினைத்துக் கொள்வேன்.

பிறகு ஒரு நாள் உங்கள் வீட்டுக்கு வந்தேனே, அதுவும் என் முன்யோசனைப்படி வந்த திட்டம்தான். உங்கள் பெற்றோர்களும் தங்கையும் ஒரு திருமணத்துக்காக அயலூர் போயிருப்பதாக நான் அறிந்தேன். ஆனால் உங்கள் தங்கை இருந்தாள். நிலைமையைச் சமாளிக்கப் பாட்டுக்கு அர்த்தம் கேட்டேன்; எனக்கு உதவிய அந்தக் குறுந்தொகைச் செய்யுள் என் உள்ளத்தில் சிலையில் அடித்த உருப்போல நிலைத்துவிட்டது.

பழந் தமிழர் காதல் வாழ்வோடு நான் ஒன்றிப்போய்விட்டதாக எனக்கு ஒரு பிரமை. நீங்களும் அப் பாட்டை மறக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். நினைவில் இருக்கிறதா?

நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆர் அளவின்றே - சாரல்
கருங் கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு,
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே!

நல்ல வேளை! உங்கள் தங்கை, பாவம், நான் பாட்டுக்கு அர்த்தம் கேட்க வந்ததாகவே எண்ணி விட்டாள். பின்பு அந்தக் கண்ணில் தூசி விழுந்த சம்பவம். என் கண்ணை அகல விழித்துத் தூசி விழுந்ததாகப் பாவனை காட்டியபோது உங்களுக்கு அது மாய்மாலம் என்று தெரிந்தும் நீங்களும் என் கண்ணில் விழாத தூசியை அகற்றுவதாக நடித்தீர்களே! மன்னித்துக் கொள்ளுங்கள். உங்களை என்ன பாடெல்லாமோ படுத்தி விட்டேன். என்னை மன்னித்துவிடுங்கள். உங்களுக்குப் பழி ஏற்படுத்தி உங்களுக்கும் உங்கள் பெற்றோருக்கும் மனம் நோகும்படி செய்த என் தந்தையை நீங்கள் மாமனாராக ஏற்று மன அமைதி அடைவது கடினமாக இருக்கும் என்பதை நான் பூரணமாக உணர்ந்துதான் இதை எழுதுகிறேன். தவறு எல்லாம் என்னுடையது என்று உங்களிடம் ஒப்புக் கொள்ளுகிறேன். என்னைக் குற்றவாளியாக்க நீங்கள் எண்ணியிருந்தால் நான் உங்களுக்குப் பக்கம் பக்கமாக வரைந்து அனுப்பியிருக்கும் கடிதங்கள் மட்டும் போதும், என் தந்தையைத் தீரா அவமானத்துக்கு உள்ளாக்குவதற்கு. ஆனால், அத்தான்! எனக்காக, உங்களவளுக்காக, நீங்கள் இதையெல்லாம் தாங்கிக் கொண்டீர்கள் என்று நான் எண்ணும் மாத்திரத்தில் என் மனம் எவ்வளவு பெருமிதம் கொள்ளுகிறது என்பதை நீங்கள் அறிவீர்களா? உங்களை நாடிய என் உள்ளம் தவறு செய்யவில்லை அத்தான். 'உயிரோடு உடல் வந்து ஒன்றுவது இயல்பு' என்று உயிர் எழுத்து, மெய் எழுத்து இலக்கணம் சொல்வது போல, என் உடல் என் உயிராகிய உங்களை நாடி வந்து அடைந்தது. எனக்காக மாசு மறு இல்லாத என் தூய அன்புக்காக நடந்து போன இந்த சம்பவத்தை ஒரு கெட்ட கனவாக எண்ணி மறந்துவிடுங்கள். திடீரென்று ஏற்பட்ட கொந்தளிப்பு எல்லாம் அடங்கி என் தந்தை நடந்ததை எண்ணி மனம் வருந்துகிறார். எனக்காக அவரை மன்னித்து விடுங்கள். என் வெற்றியை நினைத்து நீங்கள் பெருமிதம் அடைந்தால் நான் பாக்கியசாலி. அந்தப் பாக்கியத்துக்கு நான் உரியவள்தான். இல்லாவிடில் என் மனம் உங்களை நாடுமா?

என்னை எந்தக் காரணம் கொண்டும் உதறித் தள்ளிவிட நினைக்காதீர்கள். என் பெரிய தந்தையும் சிலரும் உங்கள் தந்தையைக் கண்டு பேச இருக்கிறார்கள். எனது வாழ்வும் தாழ்வும் உங்கள் கையில். அந்தக் குறுந்தொகைச் செய்யுளின் மீது ஆணை! நான் தமிழ் மரபில் வந்தவள். என்னைத் தவறு செய்தவளாக ஆக்காதீர்கள்.

— ராஜா

இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன் முக்கியமான காரியமாக, நான் பம்பாய்க்குப் போயிருந்தேன். நான் அந்நகருக்குச் சென்ற சமயம் அங்கு பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் எட்டாவது தேசிய மகாநாடு மிகப் பிரமாதமாக நடந்து கொண்டிருந்தது. இதை அறிந்ததும் பத்திரிகையாளனான என் மூளை சுறு சுறுப்படைந்தது. உடனே நான் மேற்குறித்த மகாநாட்டின் நடவடிக்கைகளைக் கவனிக்க அமீத் நகருக்குப் புறப்பட்டேன். ஆம்; பிரஜா சோஷலிஸ்ட் மகாநாடு நடக்கும் இடத்துக்கு அதன் தலைவர்கள் அமீத் நகர் என்றுதான் பெயரிட்டிருந்தனர். இந்த அமீத் யார் என்கிறீர்களா? இந்தியா — பாக் போரைக் கூர்ந்து கவனித்து வரும் ஒருசிலருக்கேனும் நிச்சயம் இவருடைய பெயர் நினைவிருக்க வேண்டுமே?

இவர் உத்திரப்பிரதேசத்தைச் சேர்ந்த காசிப்பூரில் உள்ள தாம்பூர் என்ற கிராமத்திலிருந்து வந்து இந்திய ராணுவத்தில் சேர்ந்து போர்க்களத்துக்குச் சென்ற முப்பத்திரண்டு வயதுடைய முஸ்லிம் இளைஞர். இவர் லாகூர்ப் பகுதியில் கசூர்" போர்முனையில்

# அந்தப் படம்

'ஜீவா'



விசையெதிர்ப்புத் துப்பாக்கி யொன்றை மட்டுமே கரத்தில் ஏந்திக் கொண்டு போர் புரிந்து பாக் வீரர்களை விரட்டியடித்தவர். அதுமட்டுமல்ல; கைக்குண்டுகளை மட்டுமே ஆயுதமாகக் கொண்டு வீர சாகஸங்கள் பல புரிந்து மூன்று ராட்சஸ டாங்கிகளைத் தகர்த்துத் தவிடுபொடியாக்கி விட்டு வீரமரணம் அடைந்தவர். இம்மாவீரர் நம் தேசத்துக்குப் புரிந்துள்ள மகத்தான சேவையைப் பாராட்டும் முறையிலேயே அவருடைய திருப் பெயரை மாநாடு நடக்கும் இடத்துக்கு வைத்திருந்தார்கள்.

மாநாட்டு நுழைவாயில் முகப்பில் கோரைப் பாய் மீது அழகாகத் தீட்டப்பட்ட அமீத் கானின் பெரிய உருவப் படம் கண்ணைக் கவரும் விதமாக மாட்டப்பட்டிருந்தது.

என்னைப் போலவே பார்வையாளர் பலர் வந்திருந்தனர். பெண்மணிகளும் கோஷாப் பெண்களும் கூட வந்திருந்தார்கள். மாநாட்டுப் பந்தலுக்குள்ளிருந்த எல்லா அம்சங்களையும் அவற்றில் ஈடுபட்டிருந்தவர்களையும் நான் கூர்மையாகக் கவனித்தவாறே மண்டபத்துக்குள் மெல்ல நடந்தேன். துறுதுறுத்த என் கண்கள் மகளிர் கூட்டத்தில் ஓரிடத்தில் நிலைத்து நின்று விட்டன. என் பார்வையைக் கவர்ந்தது பெண்ணொருத்தியின் மெலிந்த உருவமே. என்னை யறியாமல் என் கால்கள் அப்பெண் இருக்குமிடத்தை நோக்கி நடக்கலாயின. இளம் பெண்களை ஏறிட்டுப் பார்க்கும் இயல்புடையவனல்லாத நான் இயற்கைக்கு மாறாக, அம்மங்கையைக் கூர்ந்து கவனிக்கலானேன். இந்த என் தடுமாற்ற நிலையையுணர்ந்து நானே வியப்படைந்தேன். சோகம் படர்ந்த அவளுடைய மதிவதனம் என் மனத்தை வேதனையடைய வைத்தது. என் மனத்தைக் கவர்ந்த அப்பெண்ணுக்கு இருபத்து நான்கு வயதுக்குள் இருக்கும். இந்தடிக்கு உட்பட்டிருந்தும் அவளுடைய மெலிந்த உருவம் அவளை உயரமாகக் காட்டியது. அவளுடைய குறுகிய நெற்றியில் திலகம் எதுவும் இல்லை. வெளிறோடியிருந்த முகம் தாக படர்ந்திருந்த ஓவியம் போல் காணப்பட்டது. நகை என்று பெயரளவுக்குக் காதுகளில் சாதாரண முத்துக் கம்மலும் கழுத்தில் ஒற்றை வடப் பொன் சரடும் அணிந்திருந்தாள். அப்பெண்ணின் தோற்றத்திலிருந்தும் நடை உடை பாவனைகளிலிருந்தும் அவள் ஒரு மராட்டியப் பெண்; மத்தியதர வகுப்பினள்; விதவை என்பது தெரிந்தது. அவளுடன் யார் இருந்தார்கள் என்பதை நான்கவனிக்கவில்லை.

பொதுவாக, கைம் பெண்களைக் கண்டால் என் நெஞ்சம்



கரைந்துருகும். அதிலும் இளம் விதவைகளைப் பார்த்து விட்டால் துடிதுடித்துப் போய்விடுவேன். நம் நாட்டில் கணவனை இழந்துவிட்ட மகளிர் நிலையை எண்ணி எண்ணி நான் மனம் மாழ்குவதுண்டு.

நான் அவளையே கவனித்துக் கொண்டிருந்தால், யாராயினும் தவறாகக் கருதக் கூடும் என்ற அச்சத்தால் என் பார்வையை வேறு திசையில் திருப்பி மண்டபத்துக்குள் நடக்கலானேன். ஆனாலும், அவளுடைய பரிதாப நிலையை என்னால் மறக்க முடியவில்லை.

தலைவர் கோரே போர் முனைப் படங்களும் அவற்றின் விவரங்களும் கொண்ட கண்காட்சியைத் தொடங்கி வைத்தார்.

நான் மெல்ல ஓசைப்படாமல் எழுந்து நடந்து கண்காட்சி நடக்கும் பக்கம் போய் நிற்கலானேன். அங்கு வைக்கப்பட்டிருந்த போர்முனைப் படங்களையும் அவற்றுக்கான விவரங்களையும் பார்த்துக் கொண்டே வந்த நான் வரிசையாகக் காட்சியளித்த, போர்க் களத்தில் வீர மரணமடைந்த மாவீரர்களின் உருவப் படங்களையும் பார்வையிடலானேன்.

மாநாட்டு வாயில் முகப்பில் மாட்டப்பட்டிருந்த மேஜர் அமீத்கான் உருவப்படம் இங்கு சிறிய அளவில் முதலிடம் பெற்றிருந்தது. அடுத்து பாக். போர் விமானங்களைச் சுட்டு வீழ்த்திய பாரத விமானப் படைத் தலைவர்களான கீலர் சகோதரர்கள், அமிர்தசரஸ் நகர் மீது குண்டு வீச முயன்றபோது ஏழு பாக் போர் விமானங்களைச் சுட்டு வீழ்த்திய ராஜு, இந்திய ஜெட் விமானங்களின் தாக்குதலால் தகர்ந்துபோன பாக் டாங்கிகளுக்கு மயானம் அமைத்துத் தந்த ஆண்டியப்பன், சியால்கோட் — ஜம்மு போர் முனையில் வீரப் போர் புரிந்து களத்திலே

மரணமடைந்த மேஜர் சுரேந்திர தேவ் முதலிய மாவீரர்களின் உருவப் படங்கள் காண்போரின் பார்வையில் முக்கியமாகப் பட்டன.

இப்பெரும் வீரர்கள்தானே அடுத்தடுத்துப் படையெடுத்து வரும் பகைவர்களிடமிருந்து நம் தேசத்தைக் காத்து, தேச மக்களாகிய நம்முடைய மானத்தையும் காத்து, நம் பாரம்பரியப் பெருமையை நிலைநாட்டி வருகிறார்கள் என்று எண்ணிய நான் அமரத்துவம் அடைந்துள்ள அவர்களுடைய ஆன்மாக்களுக்கு மானசீகமாக அஞ்சலி செலுத்தினேன்.

இவ்விதமான சிந்தனையுடன் நான் மற்றொரு முறை அம்மாவீரர்களின் உருவப் படங்களையும், அப்படங்களுக்கு அடியில் அவர்களைக் குறித்துக் கொடுக்கப்பட்டிருக்கும் விவரங்களையும் கவனமாகப் பார்த்துக் கொண்டே மேஜர் சுரேந்திர தேவின் உருவப் படத்தண்டை வந்தேன். அப்போது அதன் எதிரில் ஓர் இளம் பெண் அணுக்கமாக நின்று கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தாள். அதைக் கண்டு நான் பின்வாங்கலானேன். 'அந்தப் பெண் யார்? அவளுக்கும் சுரேந்திர தேவுக்கும் ஏதேனும் சம்பந்தமிருக்குமோ?' இவ்வாறு என்னை நானே கேட்டுக் கொண்டு அவளைக் கூர்ந்து நோக்கினேன். உடனே என் கண்கள் வியப்பால் விரிந்தன. இதற்குக் காரணம் அவள் வேறு யாருமல்லள்; நான் யாரைக் காலையில் மாநாட்டுப் பந்தலினுள் நுழைகையில் பெண்கள் கூட்டத்தினிடையில் பார்த்துவிட்டு இதுவரை அலக்கண் உற்று, மனத்தைப் போட்டு உலப்பிக்கொண்டிருக்கிறேனோ, அதே மராட்டிய விதவைப் பெண்தான் என்று அறிந்ததேயாகும். இவள் சுரேந்திர தேவினுடைய மனைவியாய்த்தான் இருக்க வேண்டு மென்று நான் ஊகிக்கலானேன். என் ஊகம் சரியானதுதான் என்பது சில விநாடிகளில் அவளுக்கும் அவளுடைய அன்னைக்கும் நடந்த உரையாடலிலிருந்து தெரிந்தது. அவளுடன் ஐம்பது வயதுக்கு மேற்பட்ட மாதொருத்தி நின்றிருந்தாள். அவளுடைய இடுப்பில் இரண்டு வயதுக் குழந்தை யொன்றிருந்தது. இவர்களுக்குப் பக்கத்தில் பதினேழு வயதுள்ள இளைஞனொருவனும் காணப்பட்டான்.

என் கவனத்தை எப்படியோ கவர்ந்துவிட்ட அவ்விதவைப் பெண்ணை இவ்வளவு சீக்கிரம் எளிதாக மறுபடியும் சந்திப்பேன் என்று நான் நினைக்கவில்லை. முன் பின் அறிமுகமில்லாத இப்பெண்ணின் காரணமாக நான் ஏன் இப்படிச் சங்கடப்படுகிறேன்? பேசும் மொழியாலும் பிறந்த இனத்தாலும் முற்றும் வேறுபட்ட எங்கள் இருவருக்கு மிடையே இப்படி யொரு பந்த பாசமா? நான் பரிவு கொள்வதற்கு அவள் எப்படிப் பாத்திரமானாள்? இப்படியெல்லாம் எண்ணிச் சில விநாடிகள் திகைத்து நின்றேன்.

முதியவளின் பேச்சுக் குரல் என் சிந்தனையைக் கலைத்தது. ''அழாதே, அநு! என்ன செய்யலாம்? நீ கொடுத்து வைத்தது அவ்வளவுதான். மனத்தைத் தேற்றிக்கொள், மகளே!''

''ரொம்பச் சுலபமாகச் சொல்லிவிட்டாயே, அம்மா! அழாதே என்று. நான் அழாமல் எப்படி இருக்க முடியும்? நான் காலமுழுதும் அழுது கொண்டே இருக்க வேண்டு மென்றுதான் ஆண்டவன் விதித்துவிட்டானே! கரைந்து கரைந்து அணு அணுவாக என்னை மாய்த்துக் கொள்வதைத் தவிர எனக்கு வேறு வழியே இல்லையே!''

''ஆண்டாண்டுதோறும் அழுதுகொண்டேயிருந்தாலும் மாண்டவர்கள் உயிர்பெற்று வந்து விடுவார்களா ? அநு! படித்த பெண் நீ! யோசித்துப் பார் !''

''யோசித்துப் பார்க்கத்தான் செய்கிறேன், அம்மா ! மூளை குழம்பிப் போவதுதான் கண்ட பலன்.''

''ஐயோ ! மகளே! உன் புலம்பலை விடமாட்டாயா? இப்படி நீ நினைந்து நினைந்து கதறிக் கொண்டிருந்தால் உன் உடம்பு என்னத்துக்கு ஆகும்? உன் வயிற்றில் பிறந்திருக்கும் இந்தப் பச்சிளங் குழவியின் பால் வடியும் முகத்தைப் பார்த்தாயினும் உன் மனத்தைத் தேற்றிக் கொள்ளக் கூடாதா ? ஆறுதல் அடையக் கூடாதா?''

அநு என அவளுடைய அன்னையால் அழைக்கப்பட்ட அநுராதா தேம்பியவாறே பேசலானாள்: ''அம்மா, நீ குறிப்பிட்டது போல், குழந்தை ரவிக்காகத்தான் நான் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். ரவியின் அழகிய முகத்தைப் பார்த்துத்தான் என் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறேன். இல்லையானால், என் தெய்வம் வீர சுவர்க்கம் அடைந்து விட்டது என்ற செய்தியைக் கேட்டவுடனேயே நான் உயிரை மாய்த்துக் கொண்டிருந்திருப்பேனே!....''

'' சே ! யார் பேசும் பேச்சு இது ? மறுபடியும் இப்படி யெல்லாம் பேசாதே ! ஒரு மாவீரனின் மனைவியா உலகமறியாத சாதாரணப் பெண்கள் போல் பிதற்றுவது ? உன் கணவன் மற்றவர்களைப் போல் நோய் நொடியில் விழுந்தோ எதிர்பாராத விபத்துக்களாலோ அகாலமரணமடைந்தான், வருந்துவதற்கு? தான் பிறந்த தேசத்துக்காக — தன் சகோதர மக்களின் பாதுகாப்புக்காகப் போர்க்களஞ் சென்று எதிரிகளைக் கடுமையாகத் தாக்கிப் புறமுதுகிட்டு ஓடவைத்து விட்டல்லவா களத்திலேயே வீர மரணமடைந்தான் உன் கணவன் ? இதற்காக நீ பெருமையடைய வேண்டாமா ? 'தேசப் பாதுகாவலனை ஒரு மாவீரனின் மனைவி நான்' என்று பூரிப்படைய வேண்டாமா? இந்நினைவொன்றே உன்னை வாழ்விக்குமே !''

அன்னையின் உணர்ச்சிமிக்க பேச்சைக் கேட்டு அநுராதா அயர்ந்து போனாள்.

மூதாட்டி தன் பேச்சைத் தொடர்ந்தாள்:

''கணவன் நினைவாக உனக்கு வீரப் பதக்கம் வழங்கிய போது ஜனாதிபதி ஆறுதல் மொழி சொல்லிய வார்த்தைகள் உனக்கு நினைவில்லையா? அவர் உன் கணவனையும் உன்னையும் எவ்வளவு பெருமைப்படுத்திப் பேசினார் ? கண்ணினும் இனிய கணவனை இழந்துவிட்ட நீ தனியளல்ல. உன் குடும்பத்தினர் மட்டுமல்ல; தேச மக்களாகிய நாங்கள் அத்தனை பேரும் உனக்கு உறவினர்கள்; துணை நிற்பவர்கள்' என்று தேசத்தின் பல



பெரிய அளவிலே சமையலா ?
அவசரமான சமையலா ?
சிக்கனமான சமையலா ?
எவ்வகைச் சமையலேயும் எளிதாக்குகிறது
கால்காஸ்
கால்காஸ் - சமையலுக்கான நவீன எரிபொருள்-
ஓட்டல்கள், மருத்துவ மனைகள், உணவு விடுதிகள்
எதற்கும் இன்றியமையாதது. ஏனெனில், கால்காஸ்-
உடனடியாக சூடுபிடித்து விரைவிலே நன்கு
சமைக்க உதவுகிறது-நேரத்தையும், பணத்தையும்
மிச்சமாக்குகிறது-உபயோகிக்கவோ எளிதானது-
தேவைக்கேற்ப ஏற்றலாம், அணைக்கலாம்-
சுத்தமும், சிக்கனமும்கூட. சமையல்
நேரத்தை மணிக்கணக்கில் குறைக்கிறது.
கால்காஸ் பாதுகாப்பானது...கால்காஸ்
பாதுகாப்பான எஃகு சிலிண்டர்களில் வருகிறது.
C GAS
வீட்டிலே டெலிவரி கொடுக்கப் படுகிறது !
ஏகபோக விநியோகஸ்தர்கள் : ஈஸ்ட் கோஸ்ட் காஸ் கோ.
48-9-5, கோ-ஆபரேடிவ் காலனி, துவாரகாநகர், விசாகப்பட்டணம்-4.
டெலி : 3516. கன்னிமாரா அகெக்ஸ், மவுண்ட் ரோடு, மதராஸ்-2.
டெலி: 83428.
ஏஜென்டுகள் : மதராஸ், காக்கிநாடா, விசாகப்பட்டணம், விஜயவாடா,
ஏலூரு, குண்டூர், பாலகோல், ராஜமுண்ட்ரி, நெல்லூர், விஜயநகரம்,
மசூலிப்பட்டணம், சேலம், காட்பாடி, ஓங்கோல், வாரங்கல், பாண்டிச்சேரி,
காஞ்சீபுரம், கர்நூல், சித்தூர், திருப்பதி, போபிலி, பார்வதிபுரம், ராமசந்திர
புரம், சோம்பேட்டா, பெர்ஹாம்பூர், நரசராவ்பேட், ஸ்ரீகாகுளம், கூடூர்,
ஜெய்பூர், கம்மம், ஈரோடு.
கால்டெக்ஸ் தயாரிப்பு
C-GAS-C-5-68 TM.

பாகங்களிலுமிருந்து உனக்கு வந்த ஆறுதல் மொழிகள் தெரிவிக்கவில்லையா? இன்று இங்கு நடக்கும் இவ்வளவு பெரிய மாநாட்டில் உன் கணவனின் திருவுருவப் படம் எதனால் இடம் பெற்றது? இங்கு குழுமியுள்ள ஆயிரக் கணக்கான பேர் உன் கணவனின் திருவுருவப் படத்தைப் பார்த்துப் போற்றிப் புகழ்வது எதற்காக? தேசத்துக்காக உன் கணவன் போராடியதற்காக அல்லவா? இந்தப் பெருமையெல்லாம் சாதாரணமாகப் பிறந்து வளர்ந்து வாழ்ந்து இறந்து போகிறவர்களுக்குக் கிடைக்குமா? எண்ணிப் பார், மகளே.....!''

அநுராதா கண்களில் நீரை வழியவிட்டவாறே, ''உண்மைதான், அம்மா! நம் குடும்பம் மட்டுமல்ல, தேசம் முழுவதுமே எனக்குச் சுற்றமாகத் துணை நிற்கிறது என்பதை நான் உணர்கிறேன். இந்தப் பெருமித நினைவே என்னை வாழ்விக்கும்...... உயிர் வாழ வைக்கும். இனி மேல் நான் வெறுமே அழுது கொண்டிருக்க மாட்டேன். என் ஒரே மைந்தனுக்காக நம்பிக்கையுடன் வாழ்க்கை நடத்துவேன்.''

இப்படிப் பேசிய அவ்வீரப் பெண்மணி திரும்பித் தன் பின் நின்றிருந்த இளைஞனைப் பார்த்து, ''திலக்! நீ ஒன்று செய்வாயா! மாநாட்டு நிர்வாகிகளைப் பார்த்து உன் அத்தானின் திருவுருவப் படத்தை எனக்குக் கொடுக்க முடியுமா என்று கேட்டுப் பார். எவ்வளவு விலை கேட்டாலும் கொடுத்து விடலாம். இந்தப் படம் எனக்கு வேண்டும். இது நம் வீட்டை அலங்கரிக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன்'' என்று தழுதழுக்கும் குரலில் சொன்னாள்.

திலகன் என்ற அந்த இளைஞன் இது கேட்டுப் பிரமித்துப் போனான் என்பது அவன் பேச்சிலிருந்து தெரிந்தது. ''என்ன அக்கா! இங்கே காட்சியாக வைத்திருக்கும் இந்தப் படத்தையா கேட்கிறாய்? கண் காட்சிக்கு வைத்திருப்பவர்கள் இதைத் தர இசைவார்களா?''

மூதாட்டி குறுக்கிட்டாள்.

''போய்க் கேட்டுத்தான் பாரேன்டா, திலக்! சொல்வதற்கு முன்பே கலங்கு கிறாயே! வேறு யாரையும் கேட்காதே! நேராக மாநாட்டுச் செயலாளரிடமே போ! விஷயத்தை விவரமாகச் சொல்லு. கேட்பவர் இன்னார்; அப்படத்திலிருப்பவருக்கு இன்னவிதமான உறவு என்பதை எடுத்துச் சொல்லு. செயலாளர் தயங்கினால், தலைவரிடமே போய்க் கேட்டுவிடு. தைரியமாகப் போ. தயங்காதே!'':

அப்படியும் திலகன் தயங்கி நின்று தலையைச் சொறிந்தவாறே யோசிக்கலானான்.

விதவைப் பெண்ணின் விருப்பமும் வேண்டுகோளும் என் உள்ளத்தை உருக்கிவிட்டது. அவளுக்கு உதவ வேண்டுமென்று என் மனம் என்னை உந்தியது. ஆகவே, நான் வலியப் போய் அந்த இளைஞனைப் பார்த்து, ''தம்பி! வா! நான் உன்னை உரியவரிடம் அழைத்துப் போகிறேன்; உன் அத்தானின் திருவுருவப் படத்தை வாங்கித் தருகிறேன்'' என்று கூறி அவனைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்றேன். அநுராதா என்னை நன்றியோடு நோக்கினாள்.

''நீ நீடுழி வாழ வேண்டும், அப்பா!'' என்று மூதாட்டி என்னை வாழ்த்தினாள்.

நான் உறுதிகூறி அழைத்துச் சென்றபடி, இடைவேளையில் தக்க சமயம் பார்த்து நான் திலகனுடன் செயலாளரையும் தலைவரையும் அணுகி மேஜர் சுரேந்திரனின் மனைவியும் உறவினரும் வந்திருக்கும் விஷ

## சபாஷ் மாப்பிள்ளை!




*மாமனார் மனைவியிடம்:* **இந்த மாப்பிள்ளையைப் போய் வேண்டாம்னியே; மோட்டார் மெக்கானிக்கை மாப்பிள்ளையா அடைஞ்சது எவ்வளவு சௌகரியமாயிருக்கு பார்த்தியா?**

யத்தை முதலில் சொல்லியவாறு இவளை அறிமுகப்படுத்தி வைத்துப் பின்னர், அநுராதாவின் ஆசையை இதமாக எடுத்துச் சொன்னேன். என்னுடைய சொற் சாதுர்ய மென்ச் சொல்ல முடியாது; உருக்கமான வேண்டுகோள்தான் ஒரு சிறிதும் தடை சொல்லாதபடி செய்து அவர்களை உடனே இதற்கு இணங்க வைத்தது. அவர்கள் சுரேந்திரன் படத்தைக் கொடுக்க ஒப்புக் கொண்டது மட்டுமல்ல; அந்த அன்பளிப்பை மாநாட்டின் ஒரு சிறு நிகழ்ச்சியாக அழகுறச் செய்து அநுராதாவைக் கௌரவப்படுத்தி அவள் கரங்களில் வழங்கினர். அதற்குமுன் கண்காட்சியிலிருந்து மேஜர் சுரேந்திரதேவின் திருவுருவப் படம் கொண்டு வரப்பட்டு மேஜை மீது பார்வைக்கு வைக்கப்பட்டது. அதன் பின்னர் அநுராதாதேவி மேடைக்கு அழைத்து வரப்பட்டாள். பின்னர் தலைவர் கோரே அவர்களே அநுராதாவை மாநாட்டில் இருந்த அனைவருக்கும் அறிமுகப்படுத்தி வைக்கலானார். ''ஓர் இனிய முக்கிய நிகழ்ச்சிக்காக மாநாட்டு நடவடிக்கைகளைச் சிறிது நேரம் தள்ளி வைக்கிறேன்'' என்ற பீடிகையுடன் பேச்சைத் தொடங்கிய அவர், ''தோழர்களே ! கண் காட்சியில் வைக்கப்பட்டிருக்கும் உருவப் படங்களையும் ஓவியங்களையும் நீங்கள் பார்த்து விவரங்களையும் படித்தறிந்திருப்பீர்கள். நாகபுரிவாசியான இவர் சென்ற செப்டம்பர் மாதம் 16ந் தேதியன்று சியால் கோட் — ஜம்மு போர் முனையில் வீரதீரமாகப் போர் புரிந்து வீரசுவர்க்க மடைந்தவர். அவர் அமரரான போது இவருக்கு இருபத்தொன்பது வயதுதான். மிக இளம் வயதிலேயே நம் நாட்டுக்காகத்தன் இன்னுயிரை ஈந்து புகழடைந்திருக்கிறார்: அத்தகைய பெறலரும் பெருமகனை தேசத்துக்கு அர்ப்பணித்த அவருடைய மனைவியும் மாமியாரும் மைத்துனனும் இங்கு வந்திருக்கின்றார்கள். சுரேந்திர தேவின் அருமை மனைவியான அநுராதா தேவி கண்காட்சியில் வைத்திருக்கும் அவருடைய திருவுருவப் படத்தை நம்மிடமிருந்து பெற விரும்புகிறார். உயிரினும் மேலான, கண்ணினும் இனிய, தம் கணவனையே நம் தேசத்துக்கு வழங்கிய அநுராதா தேவிக்கு எதைக் கொடுத்தாலும் ஈடாகாது. ஆதலால், இச் சிறு உருவப் படத்தை அவருக்குக் கொடுப்பது ஒரு பெரிதல்ல. அவருக்குக் கட்டாயம் நாம் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். பிரதிநிதிகளாகிய நீங்களும் அதற்கு இசைவீர்கள் என நம்புகிறோம். கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்த அந்தப் படத்தை உங்கள் அநுமதியுடன் சகோதரியாருக்கு நம்முடைய அன்புக் காணிக்கையாகத் தருகிறோம்'' என்று கூறிச் செயலாளர் எடுத்துக் கொடுத்த சுரேந்திரதேவின் திருவுருவப் படத்தை வாங்கிப் பதுமை போல் குனிந்து நின்றிருந்த அநுராதா தேவியிடம் அன்புடன் தந்தார். கண்களில் நீர் மல்க, அநுராதா தன் கணவ்வின் திருவுருவப் படத்தை நன்றியுடன் வாங்கிக் கொண்டு அனைவரையும் நோக்கித் தலை வணங்கிவிட்டு மெல்ல மேடையோரம் சென்றாள்.

அநுராதா தேவியின் கண்களில் துளித்த கண்ணீர் மாநாட்டுப் பந்தலில் இருந்த அத்தனை பேர் கண்களிலும் நீரை வருவித்து விட்டது. அவ்வளவு உருக்கமாக இருந்தது அக்காட்சி. எப்பேர்ப்பட்ட துயரத்தையும் மனத்தினுள் வைத்து அடக்கிக் கொண்டு மன உணர்ச்சியை வெளிக்குக் காட்டாமல் இருக்கும் இயற்கையுடைய என்னைக்கூட அநுராதா தேவியின் கண்ணீர் கண்கலங்க வைத்துவிட்டது.

மந்திரத்தால் கட்டுண்டவர்கள் போல் மௌனமாகத் துயரை வெளிப்படுத்திக் கொண்டிருந்த தலைவர்களும் பிரதிநிதிகளும் பார்வையாளர்களும் அநுராதாதேவி மெல்ல மேடையை விட்டு அகலத் தொடங்கியதும்; ''மேஜர் சுரேந்திரதேவுக்கு ஜே! சகோதரி அநுராதாதேவிக்கு ஜே!'' என்று ஜெயகோஷம் செய்யலாயினர்.

அநுராதாதேவி தலைவர் கோரே விடமிருந்து பெற்ற தன் கணவரின் உருவப் படத்தைத் தன் மார்பில் சேர்த்தணைத்தவாறு மெல்ல மேடைப் படிகளிலிருந்து கீழ் இறங்கலானாள். அவள் அவ்விதம் அடிமேல் அடி வைத்து மெல்ல நடந்தது என் நெஞ்சத் தடத்தில் நடந்து போவது போன்ற உணர்ச்சியை எனக்கு உண்டாக்கிற்று. அவள் தன் தாய், குழந்தை, சகோதரன் ஆகியவர்களுடன் மாநாட்டுப் பந்தலை விட்டு வெளியேறி வெகு நேரமாகியும் என் மனக் கண்ணை விட்டு மட்டும் மறையவில்லை. ''சகோதரியே ! தேசத்துக்காகக் கணவனையே தத்தம் செய்துவிட்ட உனக்கு இச்சிறு உதவியாயினும் செய்ய முடிந்ததே ! நான் பாக்கியசாலி அம்மா !'' என்று என் வாய் மெல்ல மொழிந்தது.



# முதல் வழக்கு

பி. நாகராஜன்

மிஸ்டர் கோபாலன் பி. ஏ., பி. எல். தம் அறையில் சட்ட புத்தகங்கள் நிறைந்த பீரோவைப் பார்த்தவண்ணம் உட்கார்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அப்பொழுது பரீட்சையை மூன்று தடவை முற்றுகையிட்டு அத்துடன் போராடிய சுந்தரம் பி. ஏ., பி. எல். அறைக்குள் பிரவேசித்தான்.

''என்ன மிஸ்டர், சுந்தரம்? ஏது இவ்வளவு தூரம்? என்ன சமாசாரம்?'' எனக் கேட்டார் கோபாலன்.

''அவசரம்தான்! உங்களைப் போன்று ஒரு வக்கீலைத் தேடி வரும்படியான அசந்தர்ப்பம் எனக்கு நேர்ந்து விட்டது!'' என்றான் சுந்தரம்.

உடனே கோபாலன் சிரித்துக்கொண்டே, ''முதல் எடுப்பிலேயே ஏன் அசந்தர்ப்பம் என்கிறாய்! அரிய சந்தர்ப்பமாகவே இருக்கட்டுமே!'' என்றார்.

''உங்களைப் பொறுத்த வரையில் அரிய சந்தர்ப்பமாகவே இருக்கட்டும். என் வரையில் அசந்தர்ப்பம்தான்'' என்றான் சுந்தரம்.

''என்ன?'' என்றார் கோபாலன்.

''என் காரை நான் ஒருவன் மீது ஏற்றி விட்டேன்'' என்றான் சுந்தரம். ''கண் தெரியாமல் ஓட்டிய குற்றத்திற்கு நீ ஆளாகிறாய்'' என்றார் கோபாலன் ஆணித்தரமாக.

சுந்தரம், ''சார், கார் ஐம்பது மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்ததால் அதை நிறுத்த முடியவில்லை'' என்றான்.

''போலீஸ் உத்தரவை மீறிக் கடுமையான வேகத்தில் காரைச் செலுத்திய குற்றத்தையும் செய்தவனாகிறாய்.''

''இடது பக்கம் ஒரு செங்கல் வண்டி வந்து கொண்டிருந்தது! அதைக் கடப்பதற்காக வேகமாக வலது பக்கம் காரைத் திருப்பினேன்......!''

''ரோட்டில் தவறான பாதையில் வண்டியை விட்டது ஒரு குற்றம்.''

''இல்லையே! நானாகக் காரைத் தவறாக விடவில்லை. வலது பக்கம் ஒரு மனிதன் சைக்கிளில் வந்து கொண்டிருந்தான். என் காருக்குச் சரியாகப் பிரேக் பிடிக்காது என்று எனக்குத் தெரியும்! நான் என்ன செய்வது? பகவான் மேல் பாரத்தைப் போட்டு விட்டுக் கனவேகமாகக் காரைக் கொண்டு போவதைத் தவிர எனக்கு வேறொரு வழியும் தோன்றவில்லை.''

''பிரேக் பிடிக்காத வண்டியை வைத்துக் கொள்வது சட்டப்படி குற்றமாகிறது'' என்றார் கோபாலன் கண்டிப்பான குரலில்.

உடனே சுந்தரம், ''இதைக் கேளுங்கள், சார்! அடுத்த நிமிஷம் கார் அவன் சைக்கிளின் மீது இடித்து அவனைக் கீழே தள்ளிவிட்டது. பயத்தினால் நான் இன்னும் வேகமாக விட்டுக் கொண்டு போனேன்'' என்றான்.

''விபத்து நடந்த மறுநிமிடமே வண்டியை நிறுத்தாதது மன்னிக்க முடியாத குற்றம்'' என்றார் கோபாலன், சட்ட ஞானம் கலந்த குரலில். சுந்தரம் தொடர்ந்தான்; ''நான் வேகமாகப் போகும் போது போலீஸ் ஊது குழல் சத்தம் கேட்டது. நான் அதைக்கூடச் சட்டை செய்ய வில்லை!'' ''அடடா! என்னப்பா இது? போலீஸ் அதிகாரி வண்டியை நிறுத்தச் சொல்லியும் நிறுத்தாமல், அதிகாரியை அசட்டை செய்த குற்றத்தையும் வேறு செய்து தொலைத்தாயா?'' என்றார் கோபாலன் அலுப்புடன்.

''அந்தப் போலீஸ் அதிகாரி என்னைச் சும்மா விட்டுவிடவில்லை. பின்னால் ஒரு காரில் தொடர்ந்து வந்துவிட்டார். என்னை முந்திக் கொண்டு வந்து என்னை மடக்கினார். என்னால் காரை நிறுத்த முடியவில்லை. வண்டியில் தான் பிரேக் இல்லையே! அவர் காரின் மீதே மோதி விட்டேன். என்னைப் பற்றி விவரங்கள் கேட்டார். பொய் விவரங்களைக் கூறினேன். அவர் என் காரின் நம்பரைப் பார்த்தார். காரில் நம்பர் பிளேட் இல்லை! அது என்னுடைய கார் இல்லை. என் நெருங்கிய நண்பனுடையது. அவன் வீட்டில் இல்லாத சமயம் பார்த்துக் காரை எடுத்துக்கொண்டு வந்துவிட்டேன். அவன் இருந்தால் காரைக் கொடுக்க மாட்டான்'' என்று நிறுத்தினான் சுந்தரம்.

''சரிதான், உன் குற்றத்திற்கு அளவேயில்லை. குற்றங்களுக்கு மேல் குற்றங்களாகச் செய்திருக்கின்றாய்'' என்றார் கோபாலன்.

''ஏன், சார், நான் செய்த குற்றங்களில் எந்தக் குற்றத்திற்காக என் மீது அதிகாரிகள் நடவடிக்கை எடுப்பார்கள்'' என்று கேட்டான் சுந்தரம்.

கோபாலன் சற்று நேரம் பிரமை பிடித்தவர் போல் உட்கார்ந்திருந்தார். அவர் முகத்தில் பீதி, கலவரம், திகில் முதலிய குறிகள் மாறி மாறித் தோன்றின. ''சுந்தரம், இதெல்லாம் இருக்கட்டும், நீ இப்போது எப்படிப் போலீசிலிருந்து தப்பி வந்தாய்?'' என்று நடுங்கும் குரலில் கேட்டார்.

பரீட்சையை மூன்று தரம் முற்றுகையிட்ட சுந்தரம் சிரித்துக் கொண்டே, ''சார்! நான் இத்தனை நேரமும் சொல்லிக் கொண்டு வந்ததையெல்லாம் உண்மை என்று நினைத்தீர்களா? நான்காம் தடவையாகச் சட்டப் பரீட்சைக்குப் போகும் எனக்கு உபயோகமாக இருக்குமே என்று ஓர் உதாரணக் கேள்வியல்லவா கேட்டேன்!'' என்றான்.

அப்போது கோபாலன் பி. ஏ., பி.எல்.லின் முகமாற்றத்தைப் பார்க்க வேண்டுமே!

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam


A-8-68
பாப்ளின்கள்
ஷர்ட்டிங்குகள்: ஸ்ட்ரைப், டாப்பி,
செக், பைஜாமா. வேஷ்டிகள்:
ப்ளாடினம், ராஜா ஸ்பெஷல்
மெர்ஸிரைஸ்ட் லான்: 5531
சூட்டிங்குகள்: காபர்டின்
ப்ரின்டுகள். ப்ரின்டெட் லான்கள், வாயில்கள்,
பாப்ளின்கள்:
செலவு செய்த கலர் புட்டாக்கள்.
லெனோ மற்றும் புட்டாக்களில்
2x2 ஃபேன்ஸி ஃபுல் வாயில்கள்.
TEBILIZED* AND
TEBILIZED DOUBLE TESTED
*REGISTERED USERS.
·SANFORIZED·
அரவிந்த் பன்மடங்கு சிறப்பிப்பது அழகைப்
அரவிந்த் மில்ஸ் லிமிடெட் அகமதாபாத்
LALBHAI GROUP
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: திரு. அஜித்பாய் ஜெயந்திலால் சோமாபாய் படேல் & கோ.
5, கிடங்குத் தெரு, சென்னை. ஏகபோக ஏற்றுமதி ஏஜெண்டுகள்: திரு. லால்பாய் எக்ஸ்போர்ட்ஸ்
லிமிடெட், கன்ட்ராக்டர் பில்டிங், நிக்கோல் ரோடு, பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்—1.

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon



